كنوز الصلاة - تاميلي

# தொழுகை-
## நன்மையின் புதையல்கள்



جمعية الدعوة بالزلفي

جمعية الدعوة والإرشاد وتوعية الجاليات بالزلفي

145

هاتف: ٤٢٣٤٤٦٦ ٠١٦ ـ فاكس: ٤٢٣٤٤٧٧ ٠١٦

# தொழுகை–

# நன்மையின் புதையல்கள்

# كنوز الصلاة

جمعية الدعوة والإرشاد وتوعية الجاليات في الزلفي
Tel: 966 164234466 - Fax: 966 164234477

# كنوز الصلاة

**تأليف الشيخ سليمان بن فهد العتيبي**

**ترجمه إلى اللغة التاميلية:**

جمعية الدعوة والإرشاد وتوعية الجاليات بالزلفي

**الطبعة الثانية: ٨/١٤٤٢ هـ.**


**ح شعبة توعية الجاليات بالزلفي، ١٤٢٦هـ**

*فهرسة مكتبة الملك فهد الوطنية أثناء النشر*

**شعبة توعية الجاليات بالزلفي**

كنوز الصلاة – الزلفي

٧٨ص؛ ١٢ × ١٧ سم

ردمك : ٥- ٨٥ - ٨٦٤ - ٩٩٦٠

(النص باللغة التاميلية )

١ – الصلاة　　　أ. العنوان

ديوي ٢٥٢.٢　　　١٤٢٦/٣٨٦٨

رقم الإيداع : ١٤٢٦/٣٨٦٨

ردمك : ٥- ٨٥ - ٨٦٤ - ٩٩٦٠

# كـنوز الصـــلاة

# தொழுகை- நன்மையின் புதையல்கள்

## அணிந்துரை

எல்லாப் புகழும் அகிலங்களைப் படைத்துப் பரிபாலிக் கின்ற அல்லாஹ்வுக்கே! இறையருளும் சாந்தியும் இறைத் தூதர்களில் சிறந்தவர் மீது உண்டாகட்டும்.

தொழுகை இஸ்லாத்தின் அடிப்படைக் கடமைகளில் இரண்டாவது கடமையாகவும் இஸ்லாத்தினுடைய தூணா கவும் உள்ளது. தொழுகை இறைநம்பிக்கையாளனையும் இறைநிராகரிப்பாளனையும் வேறுபடுத்திக் காட்டும் ஓர் அடையாளமாகும்!

“தொழுகையை நிலைநாட்டுங்கள்! இணைவைப் போருடன் சேர்ந்து விடாதீர்கள்.” (30:31)

“நமக்கும் அவர்களுக்கும் இடையே உள்ள ஒப்பந்தம் தொழுகையே! யார் அதனை விட்டுவிட்டாரோ அவர் நிராகரித் தவராவார்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். புரைதா (ரலி) அவர்கள் அறிவிக்கின்ற இந்த நபிமொழி அஹ்மத் (5/346), திர்மிதியிலும் (2621) மற்றும் பல நூல்களிலும் இடம் பெற்றுள்ளது.

தொழுகையைப் பேணுவதன் மூலமாகத் தான் மனிதன் தனது மார்க்கத்தைக் காத்துக்கொள்கிறான். உமர் (ரலி) அவர்கள் தமது அதிகாரிகளுக்கு பின் வருமாறு கடிதம் எழுதினார்கள்: “உங்கள் காரியங்களில் என்னிடம் மிக முக்கியமானது தொழுகையாகும். யார் அதனைப் பேணி

பாதுகாத்துக் கொள்கிறாரோ அவர் தனது மார்க்கத்தைப் பாதுகாத்துக் கொள்வார். யார் அதனைப் பாழ்படுத்தி விடுகிறாரோ அவர் மற்ற கடமைகளையும் பாழ்படுத்தி விடுவார்...” இதனை இமாம் மாலிக்(ரஹ்) அவர்கள் தமது முஅத்தாவில் பதிவு செய்துள்ளார்கள்.

மேலும் இஸ்லாத்தின் (இறுகப் பற்றிக்கொள்ள வேண்டிய) பிடிமானங்களில் இறுதியாகக் குலைந்துவிடுவது தொழுகை தான்.

நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: “இஸ்லாத்தின் (இறுகப் பற்றிக் கொள்ள வேண்டிய) பிடிமானங்கள் (பிற்காலத்தில்) ஒவ்வொன்றாக குலைந்துவிடும். ஒன்று குலைந்துவிடும் போது மக்கள் மற்றொன்றைப் பற்றிக் கொள்வார்கள். அவற்றில் முதலாவதாக குலைந்துபோவது ஆட்சியதிகாரம் ஆகும். கடைசியாக குலைந்துபோவது தொழுகையாகும்.” அறிவிப்பவர்: அபூஉமாமா(ரலி), நூல்கள்: அஹ்மத்(5/215), தப்ரானி கபீர்(7486), இனாபதுல் குப்ரா -இப்னு பத்தா(4), முஸ்தத்ரக் ஹாகிம்(4/92), தஃழீமு கத்ரிஸ் ஸலா- முஹம்மத் பின் நஸ்ரு(407), மவாரிதுழ் ழம்ஆன்-இப்னு ஹிப்பான்(257)

இந்நபிமொழி ஹஸன் எனும் தரத்தில் அமைந்துள்ளது. மேலும் முஹம்மத் பின் நஸ்ரு அவர்கள் இந்த நபிமொழியை சரிகண்டுள்ளார்கள்.

மேலும் இமாம் அஹ்மத் அவர்கள் தொழுகையை விட்டவன் காஃபிர் என்பதற்கு இந்த நபிமொழியையே ஆதாரம் காட்டுகிறார்கள். தொழுகையை விட்டவன் காஃபிர் என்பதற்கு இன்னும் ஏராளமான சான்றுகள் உள்ளன.

எனவே தான் தொழுகையை விட்டவன் காஃபிர் என்பதில் நபித்தோழர்கள் அனைவரும் ஒரு மித்த கருத்தைக் கொண்டுள்ளனர்.

முஜாஹித் அவர்கள் அறிவிப்பதாவது: ‘நபி (ஸல்) அவர்கள் காலத்தில் உங்களிடம் இறைநிராகரிப்புக்கும் இறைநம்பிக் கைக்கும் இடையே பிரித்துக் காட்டக்கூடிய செயல் எது?’ என்று ஜாபிர் (ரலி) அவர்களிடம் நான் கேட்டேன். அதற்கு அவர்கள் “தொழுகை” என்று கூறினார்கள். நூல்கள்: தஃழீமு கத்ரிஸ் ஸலா- முஹம்மத் பின் நஸ்ரு (892), அஸ்ஸ□ன்னா-இமாம் கல்லாலு (1379), இனாபதுல் குப்ரா- இமாம் இப்னு பத்தா (876), ஷரஹ் உஸ□லி அஹ்லிஸ் ஸ□ன்னா- இமாம் லால்காயி (1538) இதன் அறிவிப்புத் தொடர் பரவாயில்லை. ஹஸன் என்ற தரத்தில் அமைந்துள்ளது.

இந்த நபிமொழியில் ‘உங்களிடம்’ என்று முஜாஹித் அவர்கள் குறிப்பிட்டதன் கருத்து, ‘முஸ்லிம்களிடம்’ அதாவது நபி (ஸல்)அவர்கள் காலத்தில் வாழ்ந்த ‘நபித்தோழர்களிடம்’ என்பதாகும்.

அபூஸ□பைர் அவர்கள் அறிவிப்பதாவது: ஜாபிர் (ரலி) அவர் களிடம் ஒரு மனிதர், ‘உங்களிடையே ஏதேனும் ஒரு பாவத்தை இணைவைப்பாக நீங்கள் கருதியது உண்டா?’ என்று கேட்டார். அதற்கு அவர்கள் ‘இல்லை’ என்று கூறினார்கள். ஒரு மனிதன் இறைநிராகரிப்பில் இருக்கிறான் என்பதற்குரிய அடையாளம் என்ன? என்று அவர்களிடம் கேட்கப்பட்டதற்கு ‘தொழுகையை விட்டு விடுவது’ என்று

பதிலளித்தார்கள். இதனை முஹம்மத் பின் நஸ்ரு அவர்கள் தமது த.ஃழீமு கத்ரிஸ் ஸலா என்ற நூலில் பதிவு செய்துள் ளார்கள். இது ஸஹீஹான அறிவிப்புத் தொடராகும்.

ஜாபிர் (ரலி) யிடம் ஒருவர், 'ஒரு மனிதன் இறைநிராகரிப்பில் இருக்கிறான் என்பதற்குரிய அடையாளம் என்ன?' என்று கேட்டதன் கருத்தாவது 'நபித்தோழர்களாகிய உங்களிடம் ஒரு மனிதன் இறைநிராகரிப்பில் இருக்கிறான் என்பதன் அடையாளம் என்ன?' என்பதாகும்.

இவ்வாறே இதற்கு முன் கூறப்பட்ட, 'உங்களிடையே ஏதேனுமொரு பாவத்தை இணைவைப்பாக நீங்கள் கருதியது உண்டா?' என்று ஒருவர் கேட்டதன் கருத்தாவது 'நபித் தோழர்களாகிய உங்களிடையே பாவங்களை இணை வைப்பாக நீங்கள் கருதியதுண்டா?' என்பதாகும்.

இக்கருத்தை முன் சென்ற (முஹம்மத் பின் நஸ்ரு அவர்களது) அறிவிப்பும் பின்வரும் லால்காயினுடைய அறிவிப்பும் உறுதி செய்கிறது. அதாவது அபூஸ□பைர் அவர்கள் ஜாபிர் (ரலி) யிடம், 'உங்களிடையே ஏதேனும் ஒரு பாவத்தை இணைவைப்பாக நீங்கள் கருதியது உண்டா?' என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள் 'அப்படி ஒன்றும் இல்லை. ஆனால் ஒரு மனிதன் நிராகரிப்பில் இருக்கிறான் என்பதன் அடையாளம் தொழுகையை விட்டுவிடுவது தான்' என்று கூறினார்கள். (1573)

மேலும் இதனை முன்னர் குறிப்பிட்ட இமாம் கல்லாலு (1372), இப்னு பத்தா (877), லால்காயி (1539) ஆகியோரது பின்வரும் மற்றொரு அறிவிப்பும் உறுதி செய்கிறது.

அதாவது ஹஸன் அவர்கள் அறிவிக்கிறார்கள்: ‘ஒரு மனிதன் இணைவைப்பிலும் இறைநிராகரிப்பிலும் இருக்கிறான் என்பதன் அடையாளம் தக்க காரணம் ஏதுமின்றி தொழுகையை விட்டு விடுவதாகும்’ என்று நபித்தோழர்கள் கூறி வந்ததாக எனக்குச் செய்தி கிடைத்தது.

ஹஸன் பஸரி அவர்கள் அறிவிக்கும் இந்த அறிவிப்பு ஸஹீஹான அறிவிப்புத் தொடராகும். ஹஸன் பஸரி அவர்கள் ஏராளமான நபித்தோழர்களைச் சந்தித்திருக்கிறார்கள். அவர்களிடமிருந்து செவியேற்றும் இருக்கிறார்கள் என்பது தெரிந்ததே! பின்வரும் அறிவிப்பும் இதனை உறுதி செய்கிறது:

அப்துல்லாஹ் அல்-உகைலீ அவர்கள் அறிவிக்கிறார்கள்: ‘முஹம்மத்(ஸல்) அவர்களின் தோழர்கள் கடமைகளில் தொழுகையைத் தவிர வேறு எதனை விட்டுவிட்டாலும் அதை இறைநிராகரிப்பாகக் கருத மாட்டார்கள்.’ இது ஸஹீஹான அறிவிப்புத் தொடராகும்.

ஜரீரி அவர்கள் அறிவிக்கிறார்கள்: ‘கடமைகளில் தொழுகையைத் தவிர வேறு எதனை விட்டு விட்டாலும் அது இறைநிராகரிப்பு- குஃப்ர் என்று நாங்கள் அறிந்ததில்லை.’ நூல்: அஸ்ஸ□ன்னா- இமாம் கல்லாலு. (1378)

அய்யூப் அவர்கள் அறிவிப்பதாவது: தொழுகையை விட்டு விடுவது குஃப்ர்- இறைநிராகரிப்பாகும். அதில் எவ்விதக் கருத்து வேறுபாடும் கிடையாது. நூல்: தஃழீமு கத்ரிஸ் ஸலா- முஹம்மத் பின் நஸ்ரு.

மேலும் முஹம்மத் பின் நஸ்ரு அவர்கள் கூறுகிறார்கள்: “தொழுயையைத் தக்க காரணம் ஏதுமின்றி காலம் கடந்து போகின்ற வரை வேண்டுமென்றே ஒருவன்விட்டு விட்டால் அவன் கா∴பிர் என்பதற்கு நபி(ஸல்)அவர்கள் மூலம் ஆதாரப் பூர்வமான ஹதீஸ் வந்திருப் பதாக இஸ்ஹாக் அவர்கள் கூறக் கேட்டுள்ளேன்.”

என்னுடைய கருத்து என்னவெனில் நபித்தோழர் களுக்குப் பிறகு வந்தவர்களில் தொழுகையை விட்டு விடுபவன் கா∴பிர் என்ற விஷயத்தில் மாற்றுக் கருத்துக் கொள்கின்ற சிலரில் இப்னு ராஹறவைஹியான இந்த இஸ்ஹாக்கும் ஒருவராகக் கருதப்பட மாட்டார் என்றே நினைக்கிறேன்.

அதனால் தான் அவருடைய மாணவரான முஹம்மது பின் நஸ்ரு அவர்கள் தமது த∴ழீமு கத்ரிஸ்ஸலா என்ற நூலில் பக்கம் 925 ல் இவ்வாறு குறிப்பிடுகின்றார்கள்: அதாவது ஹம்மது பின் நஸ்ரு அவர்கள் தொழுகையை விட்டவன் கா∴பிர், இஸ்லாமிய மார்க்கத்தை விட்டு வெளியேறியவன், தொழுகையை நிலைநாட்டுவதை மறுப்பவனுடன் போரிடுவது கூடும் என்ற விஷயத்தில் நபி (ஸல்) அவர்கள் மூலம் அறிவிக்கப்பட்டுள்ள ஹதீஸ்களைக் குறிப்பிட்டு விட்டு பிறகு இதுபோல ஸஹாபாக்களிடம் இருந்தும் நமக்கு செய்திகள் கிடைத்துள்ளன. ஆனால் ஸஹாபாக்களில் யாரிடமிருந்தும் இது விஷயத் தில் மாற்றுக் கருத்து நமக்குக் கிடைக்க வில்லை. ஆனால் அதன் பிறகு தொழுகையை விட்டவன் கா∴பிர், அதனை நிலை நாட்ட மறுப்பவனை கொல்வது

கூடும் என்ற விஷயத்தில் நபி (ஸல்) அவர்களிடமிருந்தும் பிறகு ஸஹாபாக்களிடமிருந்தும் அறிவிக்கப்பட்ட கருத்துக் களுக்கு விளக்கம் தருவதில் அறிஞர்கள் கருத்து வேறுபாடு கொண்டனர்.

நான் கூறுவது என்னவெனில் அப்துல்லாஹ் அவர் கள் தமது அஸ்ஸ□ன்னாவிலும், முஹம்மது பின் நஸ்ரு அவர்கள் தமது த∴ழீமு கத்ரிஸ் ஸலாவிலும், கல்லாலு அவர்கள் தமது அஸ்ஸ□ன்னாவிலும் ஆஜிரி அவர்கள் தமது அஷ்ஷரீஆவிலும் இப்னு பத்தா அவர்கள் தமது அல்-இனாபதுல் குப்ராவிலும் அதிகமான ஸஹாபாக்களிடமிருந்தும் மற்றவர்களிடமிருந்தும் தொழுகையை விட்டவன் கா∴பிர் என்று அறிவித்துள்ளனர். அவர்களில் சிலர் தொழுகையை விட்டவன் கா∴பிர் என தனியொரு பாடத்தை அமைத்து அதற்கான ஆதாரங்களை அதில் கொண்டு வந்துள்ளனர்.

இதோ இந்த நூலை சுலைமான் பின் ∴பஹ்த் அல் உதைபி அவர்கள் 'தொழுகை-நன்மையின் புதையல்கள்' என்ற பெயரில் தொகுத்துள்ளார்கள். இதில் மாபெரும் கடமையான தொழுகையின் முக்கியத்துவத்தையும் இறை மார்க்கத்தில் அதற்குரிய அந்தஸ்தையும் விளக்கியுள்ளார்கள். மேலும் தொழுகையின் சட்டநிலையையும் அதன் பயன் களையும் ஏனைய வழிபாடுகளுக்கு மத்தியில் தொழுகைக் குரிய தனிச் சிறப்புக்களையும் அதற்குக் கிடைக்கின்ற நன்மை களையும் நற்கூலிகளையும் இதில் குறிப்பிட்டுள்ளார்கள்.

அல்லாஹ் அவர்களுக்கு நற்கூலி வழங்குவானாக! நல்லருள் புரிவானாக!

**அன்புடன்,**

**அப்துல்லாஹ் பின் அப்துர் ரஹ்மான் அஸ்ஸஅத்**

## முன்னுரை

தொழுகை மனதைப் பக்குவப்படுத்துகிறது. ஆன்மாவைப் பண்படுத்துகிறது. அல்லாஹ்வின் கண்ணியத்தையும் மகத்து வத்தையும் உள்ளத்தில் விதைத்து உள்ளத்தைப்

பிரகாசிக்கச் செய்கிறது. மேலும் தொழுகை மனிதனை நற்பாக்கியமுள்ளவனாக ஆக்குவதோடு அழகிய குணங் களால் அவனை அலங்கரிக்கிறது. ஒவ்வொரு இறைத் தூதரும் ஏகத்துவ போதனைக்குப் பிறகு தொழுகையைப் போதிப்பதையே தொடர்ந்து நடைமுறையாகக் கொண் டிருந்தனர்.

இதோ இஸ்மாயீல் (அலை) அவர்களைப் பற்றி அல்லாஹ் கூறுகிறான்: "அவர் தமது குடும்பத்தாருக்கு தொழுகையை ஏவக்கூடியவராக இருந்தார்." (19:55) ஈஸா (அலை) அவர்கள் கூறியதை அல்லாஹ் கூறுகிறான்: "நான் உயிருடன் இருக்கும் காலமெல்லாம் தொழுமாறும் ஸகாத் கொடுக்குமாறும் அல்லாஹ் எனக்குக் கட்டளையிட்டான்." (19:31,32)

தொழுகையின் மூலம் தினமும் அல்லாஹ்வுடன் முழுமை யானதொரு தொடர்பு ஏற்படுகிறது. அதன் மூலம் மனிதன் ஈமானிய சக்தியை திரட்டிக்கொள்கிறான். அது மார்க்கத்தைக் கடைபிடிப்பதிலுள்ள சிரமங்களை அவனுக்கு இலகுவாக்கி உதவுகிறது.

தொழுகையில் நன்மையின் அரிய புதையல்கள் நிறைந் திருக்கின்றன. அவை நம் கண் முன்னே பரவிக்கிடக்கின்றன. ஆனால் பார்வைக் கோளாறு உள்ளவர்கள் அவற்றை எப்படிக் பார்ப்பார்கள்? தொழுகையில் மூன்று புதையல்கள் மறைந்திருக்கின்றன. முதலில் அல்லாஹ்விடம் உதவி தேடுவது கொண்டும் பிறகு ஆய்வு, கண்டிப்பு, உறுதி, வாய்மை ஆகியவற்றின் மூலமும் ஒரே ஒரு தொழுகையில்

மட்டும் முஸ்லிம்களிலேயே மிகப் பெரும் செல்வந்தர்களாய் நீங்கள் ஆகலாம்!

தொழுகையில் புதைந்துள்ள இந்தப் புதையல்களில் முதலாவது தொழுகைக்காகத் தயாராகுவதாகும். உளுச் செய்தல், முஅத்தின் பாங்கு சொல்லும்போது அவர் கூறுவது போலத் திரும்பக் கூறுதல், தொழுகைக்காக முன்னரே ஆஜராகுதல் போன்ற பல விஷயங்கள் மூலம் இந்தப் புதையலை நாம் பெற முடியும்.

இரண்டாவது: இந்தப் புதையலை தொழுகையின் ஆழத்தில் மூழ்கிப் பெற முடியும். அதாவது ஷரீஅத் விரும்பு கின்ற முறையில் முழுப் பணிவுடனும் அமைதியுடனும் தொழு கையை நிறைவேற்றுவதன் மூலம் இதைப் பெற முடியும்.

விலை மதிப்புள்ள இந்தப் புதையல்களில் மூன்றாவதை தொழுகையை நிறைவேற்றிய பிறகு செய்ய வேண்டிய திக்ருகள் மூலமாகவும் ராத்திப்- வழமையான சுன்னத்து களில் பின் சுன்னத்துகளை நிறைவேற்றுவதன் மூலமாகவும் இதைப் பெற முடியும்.

இறுதியாக எல்லாம் வல்ல அல்லாஹ் இந்த நூலில் உள்ள தவறுகளையும் குறைகளையும் எனக்காக மன்னித்து முஸ்லிம்களுக்கு இதில் பயன்களை நல்குவானாக! என அவனிடம் வேண்டுகிறேன். மேலும் சங்கைக்குரிய அல்லாஹ் என்னுடைய பணிவான இம்முயற்சியின் மூலம் இரு கூலி களுக்குரியோரில் ஒருவராக என்னை ஆக்கியருள்வானாக. ஒன்று ஆய்வு செய்ததற்குரிய கூலி. மற்றொன்று அந்த ஆய்வு சரியாக அமைவதன் கூலி. நம்முடைய இறுதி

முழக்கம் அகில உலகையும் படைத்துப் பரிபாலிக்கின்ற அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும் என்பதாகும்!

**அன்புடன்,**
**அபூ சுல்தான்**
**சுலைமான் பின் ஃபஹ்த் அல்-உதைபி**
**த.பெ. எண்: 270144**
**ரியாத்- 11352**
**தேதி: 22-10-1421 ஹிஜ்ரி**

## தொழுகை- நன்மையின் புதையல்கள்

தொழுகையில் மாபெரும் புதையல்கள் உள்ளன. பெரும் பாலான மக்களுக்கு அவை தெரியாமல் இருக்கலாம். இந்தப் புதையல்கள் நன்மைகளாலும் நற்கூலிகள் மற்றும் அந்தஸ்து களாலும் நிறைந்திருக்கின்றன. ஆனால் ஷைத்தான் அவற்றை விட்டும் நம்மைத் திசை திருப்பாமல் விடமாட்டான்.

அவற்றைப் பார்ப்பதை விட்டும் நம்மைத் தூரப்படுத்தாமல் விட மாட்டான். நம்முடைய ஆழ்ந்த உறக்கத்திலிருந்து நாம் விழித்துக் கொண்டாலும் அந்த ஷைத்தான் அந்த நன்மைகளிலும் நற்கூலிகளிலும் பெருமளவு நமக்குக் கிடைக்காமல் செய்வதற்காக சிறிதளவைக் கொண்டு நிறை வடையுமாறு நம்மைச் செய்துவிடுவான். சிலபோது ஒரு தொழுகையைத் தொழுது விட்டு எந்தக் கூலியும் நமக்கு எழுதப்படாத நிலையில் திரும்பிவிடுகிறோம். அல்லாஹ் நம்மை மன்னிக்க வேண்டும்!

இதனால் தான் மனம், மனோ இச்சை, ஷைத்தான் ஆகியவற்றுக்கு எதிராகப் போர்க்கொடி உயர்த்த வேண்டும் என்று கருதினேன். இறைநம்பிக்கை, சொல் செயல்களில் உளத்தூய்மை எனும் ஆயுதம் தரித்து, உள்ளச்சம், பணிவு எனும் கவசம் அணிந்து, பொறுமை மற்றும் திக்ரின் மூலம் பாதுகாப்பைப் பெற்று மனம், மனோ இச்சை,ஷைத்தான் ஆகியவை எப்படி வந்தாலும் அவற்றுக்கு எதிராகப் போர்ப் பிரகடனம் செய்ய வேண்டும். அப்போது தான் நம்முடைய தொழுகையையும் அதில் அடங்கியுள்ள-முற்காலங்களில் நாம் தவற விட்ட பெரும் பொக்கிஷங்களையும் நாம் பேண முடியும் என்று நாடினேன்.

நாம் நம் உறக்கத்திலிருந்தும் கவனக்குறைவிலிருந்தும் விழிப்பதற்கும் சான்றோர்களின் பயணக் கூட்டத்தில் இணைந்து நம்முடைய நன்மையின் கணக்குகளை உயர்த்து வதற்கும் படைத்த இறைவனின் அருளையும் மன்னிப்பையும்

எதிர்பார்ப்பதற்கும் இன்னும் நேரம் வரவில்லையா? அப்போது தான் நாம் நல்லோர்களுடன் சொர்க்கத்தில் நுழைய முடியும்.

தொழுகையில் மாபெரும் புதையல்கள் உள்ளன. அவற்றில் சிலவற்றை தொழுகைக்கு முன்னர் பெற்றுக்கொள்ளலாம். இன்னும் சிலவற்றை தொழுகையின்போதும் மற்றும் சிலவற்றை தொழுகைக்குப் பிறகும் பெற்றுக்கொள்ள முடியும்.

உளத்தூய்மை, இலட்சியம் எனும் கப்பல் மூலம் தொழுகையில் சொல்லிலும் செயலிலும் புதைந்துள்ள மூன்று புதையல்களைத் தேடும் பயணத்தைத் தொடங்குவோம்.

1. முதல் புதையல் (தொழுகைக்கு முன்) தொழுகைக்காகத் தயாராகுதலில் உள்ளது.

2. இரண்டாவது புதையல் (தொழுகையின் போது) தொழுகையை நிறைவேற்றுதலில் உள்ளது.

3. மூன்றாவது புதையல் (தொழுகைக்குப் பிறகு) அதாவது தொழுகைக்குப் பிறகு செய்யக்கூடிய திக்ருகளிலும் தொழக் கூடிய சுன்னத்துகளிலும் உள்ளது.

## முதல் புதையல்

### தொழுகைக்காகத் தயாராகுதல்

விலை மதிப்பு மிக்க இந்தப் புதையலை தொழுகையில் பிரவேசிப்பதற்கு முன் நாம் பெற்றுக் கொள்ளலாம். அதாவது தொழுகைக்கான முன்னேற்பாடுகள், மன ரீதியான ஆயத் தங்கள் மூலம் அல்லாஹ்வின் விருப்பப்படி இந்த அரிய

புதையலை நாம் பெறலாம். இதோ இந்தப் புதையலைப் பெறுவதற்காக நாம் எடுத்து வைக்கும் எட்டுக்கள் வருமாறு:

### 1. உளூச் செய்தல்

உளூவுக்கு பெரும் சிறப்பு உண்டு. நன்மைகளையும் பன்மடங்கு கூலிகளையும் சம்பாதிப்பதற்காக நாம் எடுத்து வைக்கும் எட்டுக்களில் இது முதல் எட்டு. இந்த உளூவின் மூலம் பின்வரும் நற்கூலிகளை நாம் பெற முடியும்.

### அ. இறைநேசம்

“திண்ணமாக அல்லாஹ் பாவமன்னிப்புத் தேடுவோரை விரும்புகிறான். தூய்மையாக இருப்போரையும் விரும்புகிறான்.” (2:222) அல்லாஹ் நம்மை நேசிப்பதை விட மிகப் பெரும் கூலி என்ன இருக்க முடியும்?

ஷைக் ஸஅதி அவர்கள் தமது திருக்குர்ஆன் விரிவுரையில் பின்வருமாறு கூறுகிறார்கள்: இந்த வசனத்தில் உள்ள ‘தூய்மையாக இருப்போர்’ என்பதன் கருத்து பாவங்களை விட்டும் தூய்மையாக இருப்போர் என்பதாகும். இது அசுத்தங்கள் மற்றும் சிறு, பெருந் தொடக்குகளை விட்டும் சுத்தமாகிற புலன் ரீதியான சுத்தத்தையும் உள்ளடக்கும். இக்கருத்தில் பொதுவாக சுத்தம் ஷரீஅத்தின் நடை முறையில் உள்ளது என்பதும் தெளிவாகிறது. ஏனெனில் சுத்தமாக இருப்பவர்களை அல்லாஹ் நேசிக்கிறான். இதனால் தான் தொழுகை, தவாஃப் ஆகியவை நிறைவேறு வதற்கும் திருக்குர்ஆனை தொடுவது ஆகுமாவதற்கும் பொதுவாக சுத்தம் என்பது நிபந்தனையாக இருக்கிறது.

**ஆ. உளூவின் தண்ணீருடன் பாவங்கள் வெளியேறுதல்**

“ஒரு முஸ்லிமான அல்லது மு.:மினான அடியான் உளூச் செய்தால் அவன் முகத்தைக் கழுவும்போது அவன் கண்களால் கண்ட பாவங்கள் அனைத்தும் தண்ணீருடன் அல்லது தண்ணீரின் கடைசித் துளியுடன் வெளியேறி விடுகின்றன. அவன் கைகளைக் கழுவும்போது அவன் கையால் தொட்ட பாவங்கள் அனைத்தும் தண்ணீருடனோ தண்ணீரின் கடைசித் துளியுடனோ வெளியேறிவிடுகின்றன. அவன் கால்களைக் கழுவும்போது எந்தப் பாவங்களுக்காக அவன் நடந்து சென்றானோ அந்தப் பாவங்கள் அனைத்தும் தண்ணீ ருடன் அல்லது தண்ணீரின் கடைசித் துளியுடன் வெளியேறிவிடுகின்றன. இறுதியில் அனைத்துப் பாவங்களை விட்டும் தூய்மையாகிவிடுகின்றான்” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹு□ரைரா (ரலி), முஸ்லிம் (244)

“யார் உளூச் செய்கிறாரோ அதையும் அழகாகச் செய் கிறாரோ அவருடைய பாவங்கள் அவருடைய உடலிலிருந்து ஏன் அவருடைய நகக்கண்கள் வழியாகக்கூட வெளியேறி விடுகின்றன” என நபி (ஸல்) கூறினார்கள்.

அறிவிப்பவர்: உஸ்மான் (ரலி), நூல்: முஸ்லிம் (245)

**இ. மறுமையில் உளூவின் உறுப்புக்களில் ஒளி வீசுதல்**

“என்னுடைய சமுதாயத்தினர் மறுமையில் உளூவின் காரணமாக முகம், கை, கால்கள் ஒளிமயமானவர்களே! என அழைக்கப்படுவர். எனவே உங்களில் எவருக்குத் தமது ஒளியை (அவர் உறுப்புக்களில்) நீட்டிக்கொள்ள முடியுமோ

அதனைச் செய்து கொள்ளட்டும்” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹு□ரைரா (ரலி), நூல்: புகாரி (136), முஸ்லிம் (246)

அல்ஃகுர்ருல் முஹஜ்ஜலீன் (முகம், கை, கால்கள் வெண் மையானவர்கள்) என்பதன் வேர்ச்சொல்லான அல்ஃகுர்ரு என்பது குதிரை முகத்திலுள்ள வெண்மை. அத்தஹ்ஜீல் என்பது உடல் முழுவதும் கருப்பாக, முகம் -கை கால்கள் மட்டும் வெண்மையாக இருக்கும் குதிரைக்குச் சொல்லப் படும். மறுமையில் உளூவின் உறுப்புக்களில் ஏற்படக்கூடிய பிரகாசத்தை நபி (ஸல்) அவர்கள் இதற்கு ஒப்பிட்டுள்ளார்கள்.

**ஈ. பாவங்கள் அழிக்கப்பட்டு, பதவிகள் உயர்த்தப்படுதல்**

“எந்தக் காரியங்கள் மூலம் அல்லாஹ் பாவங்களை அழித்து பதவிகளை உயர்த்துவானோ அவற்றை நான் உங்களுக்கு அறிவிக்கட்டுமா?” என நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அதற்குத் தோழர்கள் ‘அல்லாஹ்வின் தூதரே! அறிவியுங்கள்’ என்றனர். உடனே நபி (ஸல்) அவர்கள், “சிரமமான நேரங்களிலும் உளூவைப் பூரணமாகச் செய்வது, பள்ளிவாசல்களுக்கு அதிகம் நடந்து செல்வது, ஒரு தொழு கைக்குப் பிறகு மறு தொழுகையை எதிர்பார்ப்பது. இது தான் எல்லையைப் பாதுகாப்பது, இது தான் எல்லையைப் பாதுகாப்பது” என்று கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹு□ரைரா (ரலி), நூல்: முஸ்லிம் (251)

சிரமமான நேரங்கள் என்றால் கடும் குளிர், செயல்படுவ தற்குக்கூட சோம்பல்படச் செய்யும் அளவிலான நோய் போன்ற மனிதன் உளூ செய்வதற்குச் சிரமமான நிலைகள் ஆகும்.

மேற்கூறப்பட்ட இக்காரியங்களை வழக்கமாகச் செய்பவர் அதனால் அவருடைய பாவங்கள் மன்னிக்கப் படுவதையும், அவருடைய நன்மைகள் அதிகரிக்கப் படுவதையும் மேலும் அவர் சொர்க்கம் செல்வதையும் எதிர்பார்ப்பவராக இருப்ப தால் பகைவர்களை எதிர் நோக்கி நாட்டின் எல்லையைப் பாதுகாக்கும் பணியில் ஈடுபட்டிருக்கக்கூடிய, மேலும் தனது பணியின் மூலம் உயிர்த்தியாகத்தையும் மன்னிப்பையும் எதிர் பார்க்கக்கூடிய ஒரு போராளிக்கு அவரை நபி (ஸல்) அவர்கள் ஒப்பிட்டுள்ளார்கள்.

சில அறிஞர்கள் கூறுகிறார்கள்: 'இக்காரியங்களுக்கு எல்லையைப் பாதுகாத்தல் எனப் பெயர் வரக் காரணம் அவை பாவங்களிலிருந்து அந்த மனிதனைப் பாதுகாக் கின்றன அதாவது தடுக்கின்றன என்பது தான்.'

**உ. பாவங்கள் மன்னிக்கப்படுதலும் சொர்க்கம் செல்லுதலும்**

உஸ்மான் (ரலி) அவர்கள் உளுச் செய்து விட்டு, நான் செய்த இந்த உளுவைப் போன்றே நபி (ஸல்) அவர்களும் உளுச் செய்யப் பார்த்திருக்கிறேன். இவ்வாறு அவர்கள் உளுச் செய்துவிட்டு, "எனது இந்த உளுவைப் போன்று யார் உளுச் செய்து விட்டு பிறகு தன் மனதுடன் பேசிக் கொண்டிருக்காமல் (கற்பனையில் மூழ்காமல், மன ஓர்மை யுடன்) இரண்டு ரக்அத் தொழுகிறாரோ அவருக்கு முன்னர் செய்த பாவங்கள் மன்னிக்கப்படும்" என்று கூறினார்கள்.

அறிவிப்பவர்: உஸ்மான் (ரலி), புகாரி (164), முஸ்லிம் (226)

“யார் உளுச் செய்து அதையும் அழகுறச் செய்து முழு ஈடுபாட்டுடன் இரண்டு ரக்அத்துகள் தொழுகிறாரோ அவருக்கு சொர்க்கம் கடமையாகிவிடும்” என நபி(ஸல்) கூறினார்கள்.

அறிவிப்பவர்: உக்பா பின் ஆமிர் (ரலி),

நூல்: அபூதாவூத் (906), நஸயீ (151), முஸ்லிம் (234)

**2. உளுச் செய்த பிறகு திக்ரு செய்தல்**

உளுச் செய்த பிறகு கூறக்கூடிய திக்ருக்கு மிகப் பெரும் சிறப்பு உண்டு. முதல் புதையலின் கருவூலத்தில் அதிக அளவு நன்மைகளையும் நற்கூலிகளையும் நாம் தேடிக்கொண்டே இருக்கிறோம். உளுவிற்குப் பிறகு கூறக்கூடிய குறிப்பிட்ட திக்ருகளின் மூலம் பின்வரும் நன்மைகளை நாம் அடைந்து கொள்ள முடியும்.

**அ. சொர்க்கத்தின் எட்டு வாயில்களில் எந்த வாயில் வழியாகவும் நுழையலாம்**

உங்களில் ஒருவர் உளுச் செய்து விட்டு அதையும் பூரணமாகச் செய்துவிட்டு பிறகு “அஷ்ஹது அல்லாயிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீக்கலஹு வஅஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வரஸுலுஹு” என்று கூறினால் அவருக்காக சொர்க்கத்தின் எட்டு வாசல்கள் திறக்கப்படுகின்றன. அவர் விரும்பிய எந்த வசல் வழியாகவும் அவர் அதில் நுழையலாம் என நபி(ஸல்) கூறினார்கள்.

அறிவிப்பவர்: உமர் (ரலி), நூல்: முஸ்லிம் (234)

أَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللهُ وَحْدَهُ لاَشَرِيْكَ لَهُ وَ أَشْهَدُ أَنَّ مُحَمَّدًا عَبْدُهُ وَرَسُوْلُهُ

(பொருள்: வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு யாதொரு இணையுமில்லை என்றும் முஹம்மது நபி அவர்கள் அல்லாஹ் வின் அடியார், தூதர் என்றும் நான் சாட்சி கூறுகிறேன்.)

**ஆ. அதன் நன்மைகள் ஒரு ஏட்டில் எழுதப்பட்டு முத்திரை யிடப்படும். பிறகு கியாமத் நாள் வரை அது பிரிக்கப்பட மாட்டாது.**

உளுச் செய்துவிட்டு “சுப்ஹானகல்லாஹு ம்ம வபிஹம்திக அஷ்ஹது அல்லாயிலாஹ இல்லா அன்த்த அஸ்த ஃக் ஃபிருக வஅதூபு இலைக்” என்று யார் கூறினாரோ அவருக்குரிய நன்மைகள் ஒரு ஏட்டில் எழுதப்பட்டு முத்திரையிடப்படும். பிறகு மறுமை நாள் வரை அது பிரிக்கப்பட மாட்டாது என நபி (ஸல்) கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஸயீத் (ரலி),

நூல்: தர்ஃகீப் வத்தர்ஹீப், தப்ரானி-அவ்ஸத், அமலுல் யவ்மி வல்லைலாவில் இமாம் நஸயீ

سُبْحَانَكَ اللَّهُمَّ وَبِحَمْدِكَ أَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ أَنْتَ أَسْتَغْفِرُكَ وَأَتُوْبُ إِلَيْكَ

(பொருள்:இறைவா! உன்னைப் புகழ்வதுடன் துதிக்கவும் செய்கிறேன். வணக்கத்திற்குரியவன் உன்னைத் தவிர வேறு யாருமில்லை என்று சாட்சி கூறுகிறேன். உன்னிடமே பாவ மன்னிப்புக் கோருகிறேன். மேலும் பாவமீட்சி தேடி உன்னிடமே மீளுகிறேன்.)

**3. பல் துலக்குதல்**

நாம் தொடர்ந்து ஒன்றன் பின் ஒன்றாக நன்மைகளை சம்பாதித்துக்கொண்டிருக்கிறோம். இப்போது பல் துலக்குதல் என்ற இடத்தில் நிற்கிறோம். இதோ இதனுடைய மகத்தான நன்மை:

“பல் துலக்குவது வாயை சுத்தப்படுத்தக்கூடியதும் இறைவனை திருப்திபடுத்தக்கூடியதுமாகும்” என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: ஆயிஷா (ரலி),

நூல்: நஸயீ (5), இப்னு குஸைமா, இப்னு ஹிப்பான்

### 4. தொழுகைக்காக முன்னேரத்தில் செல்லுதல்

தொழுகைக்காக முன்னேரத்தில் செல்வதற்கு மிகப் பெரும் சிறப்பு இருக்கிறது.

“பாங்கிலும் முதல் வரிசையிலும் உள்ள நன்மைகளை மக்கள் அறிவார்களானால் பிறகு (அதில் யாருக்கு முன்னுரிமை கொடுப்பது எனும் நிலையில்) சீட்டுக் குலுக்கி எடுத்தே தீர்வு காண முடியும் என்று அவர்கள் கருதினால் சீட்டுக்குலுக்கலில் ஈடுபடுவார்கள். தொழுகையை ஆரம்ப நேரத்தில் நிறை வேற்றுவதிலுள்ள நன்மையை அறிவார்களானால் அதற்காக முந்திச் செல்வர்” என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹ□ரைரா (ரலி),

புகாரி (615), முஸ்லிம் (437)

ஜ□ம்ஆ தொழுகைக்காக முன்னேரத்திலேயே செல்வதற்கு பிரத்தியேகமான, ஒப்பிட முடியாத சிறப்பு உண்டு. இதோ இந்த நபிமொழியை சிந்தித்துப் பாருங்கள்.

“ஜ□ம்ஆதினத்தில் யார் (தலையைக்) கழுவி குளித்து விட்டு முன் நேரத்திலேயே புறப்பட்டு வாகனத்தில் வராமல் நடந்து வந்து இமாமுக்கு அருகில் அமர்ந்து வீணான காரியத்தில் ஈடுபடாமல் (உரையை) செவி தாழ்த்திக் கேட்கிறாரோ அவர் எடுத்து வைக்கும் ஒவ்வொரு எட்டுக்குப் பகரமாக ஒரு வருடம் நோன்பு நோற்று நின்று வணங்கிய கூலி அவருக்கு உண்டு” என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அவ்ஸ் பின் அவ்ஸ்(ரலி),

நூல்: அஹ்மத்(15585),அபூதாவூத்(345),நஸயீ(1367),திர்மிதி (496),இப்னுமாஜா(1087),

ஜ□ம்ஆ தொழுகைக்காக எடுத்து வைக்கப்படும் ஒவ்வொரு எட்டும் வருடம் முழுவதும் நோன்பு நோற்று நின்று வணங்கிய கூலிக்கு நிகரானதாகும். இதை விட மிகப் பெரிய சிறப்பு என்ன இருக்க முடியும்?! இதை விட மிகச் சிறந்த கூலி எதுவாக இருக்க முடியும்?!

அதுபோல தொழுகைக்காக முன்னேரத்தில் செல்வதைப் பேணுவது- வழமையாக்குவது அவரது உள்ளம் பள்ளிவாச லுடன் சம்பந்தப்பட்டுள்ளது என்பதற்குச் சான்றாகும்.

அல்லாஹ்வின் நிழலைத் தவிர வேறு நிழல் இல்லாத (மறுமை) நாளில் அல்லாஹ் ஏழு பேர்ருக்கு தனது நிழலில் நிழல் கொடுப்பான் என்று நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். அந்த ஏழு பேர்களில் ஒருவரைப் பற்றிக் கூறும்போது “ஒரு மனிதர், அவர் பள்ளிவாசலை விட்டும் வெளியே வந்தால் மீண்டும் பள்ளிவாசலுக்கு திரும்பும் வரை அவரது உள்ளம்

பள்ளிவாசலோடு தொடர்பு கொண்டிருக்கும்” என்று குறிப்பிட்டார்கள். அறிவிப்பவர்: அபூஹு□ரைரா (ரலி), நூல்: புகாரி (660), முஸ்லிம் (1031)

## 5. பாங்கின் வார்த்தைகளைத் திரும்பக் கூறுதல்

தொழுகையிலுள்ள நன்மையின் முதல் புதையலின் கருவூலத்திலிருந்து விலை மதிப்பு மிக்க நற்கூலிகளையும் உன்னதமான நன்மைகளையும் தேடும் பயணத்தை நாம் தொடர்ந்துகொண்டே இருக்கிறேம். பாங்கின் வார்த்தைகளைத் திரும்பக் கூறுவதன் நன்மையுடன் இப்போது இருக்கிறோம். அது எப்படிப்பட்ட நன்மை எனில் இந்த அமலுக்குரிய கூலி சொர்க்கம் ஆகும் என்று நபி (ஸல்) அவர்கள் நமக்கு அறிவித்துள்ளார்கள். பின்வரும் இரண்டு நபிமொழிகளை என்னுடன் சேர்ந்து சிந்தித்துப் பாருங்கள்.

உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: “முஅத்தின்- பாங்கு சொல்பவர் அல்லாஹு அக்பர் அல்லாஹு அக்பர் என்று கூறும்போது உங்களில் ஒருவர் அல்லாஹு□ அக்பர் அல்லாஹு□ அக்பர் என்று கூறுவாரானால் பிறகு அஷ்ஹது அல்லா யிலாஹ இல்லல்லாஹு□ என்று அவர் கூறும்போது அஷ்ஹது அல்லாயிலாஹ இல்லல்லாஹு□ என்று கூறுவாரானால் பின்னர் அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரஸ□லுல்லாஹ் என்று அவர் கூறும்போது அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரஸ□லுல் லாஹ் என்றும் பின்பு அவர் ஹய்ய அலஸ் ஸலாஹ் என்று கூறும்போது லாஹவ்ல வலா குவ்வத இல்லா பில்லாஹ் என்றும் பிறகு அவர் ஹய்ய அலல் ஃபலாஹ் என்று கூறும் போது லாஹவ்ல வலா

குவ்வத இல்லா பில்லாஹ் என்றும் பிறகு அவர் அல்லாஹு□ அக்பர் அல்லாஹு□ அக்பர் என்று கூறும்போது அல்லாஹு□ அக்பர் அல்லாஹு□ அக்பர் என்றும் அதன் பிறகு லாயிலாஹ இல்லல்லாஹ் என்று அவர் கூறும் போது லாயிலாஹ இல்லல்லாஹ் என்றும் தூய்மையான உள்ளத்துடன் கூறுவாரானால் அவர் சொர்க்கம் செல்வார்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம்-385)

(**லாஹவ்ல வலா குவ்வத இல்லா பில்லாஹ்** என்பதன் பொருள்: தீமையை விட்டும் விலகுவதும் நன்மை செய்ய ஆற்றல் பெறுவதும் அல்லாஹ்வைக் கொண்டே தவிர வேறில்லை.)

அபூஹு□ரைரா (ரலி) அறிவிக்கிறார்கள்: நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது பிலால் பாங்கு சொல்ல எழுந்தார். அவர் பாங்கு சொல்லி முடித்ததும் "இவர் கூறியது போல யார் உறுதியாகக் கூறினாரோ அவர் சொர்க்கம் செல்வார்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நூல்: நஸயீ (668), அஹ்மத் (8270)

### 6. பாங்கிற்குப் பிறகு திக்ர் செய்தல்

பாங்கிற்குப் பிறகு கூறும் திக்ருக்கு மகத்தான நன்மை உண்டு. பெரும்பாலான மக்கள் அதைத் தெரியா மலிருக் கிறார்கள். பின்வரும் தலைப்புகளின் கீழ் அவற்றைச் சுருக்க மாகத் தருகிறோம்.

#### அ. பாவங்கள் மன்னிக்கப்படுதல்

முஅத்தின் பாங்கு சொல்வதைக் கேட்டதும் “வஅன அஷ்ஹது அல்லாயிலாஹ இல்லல்லாஹ வஹ்தஹ லாஷரீக் கலஹ வஅன்ன முஹம்மதன் அப்துஹ வரஸலுஹ, ரழீத்து பில்லாஹி ரப்பன் வபி முஹம்மதின் ரஸலன் வபில் இஸ்லாமி தீனா” என்று யார் கூறுகிறாரோ அவருடைய பாவங்கள் மன்னிக்கப்படும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: ஸஅத் பின் அபீவக்காஸ் (ரலி), (முஸ்லிம்-386)

وَأَنَا أَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللهُ وَحْدَهُ لاَ شَرِيْكَ لَهُ وَأَنَّ مُحَمَّدًا عَبْدُهُ وَرَسُوْلُهُ

رَضِيْتُ بِا للهِ رَباًّ وَبِمُحَمَّدٍ رَسُوْلاً وَبِالإِسْلاَمِ دِيْنًا

(பொருள்: வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. அவன் தனித்தவன் அவனுக்கு யாதொரு இணையுமில்லை என்றும் முஹம்மது நபி அவர்கள் அல்லாஹ்வுடைய அடியார், தூதர் என்றும் நான் சாட்சி சொல்கிறேன். மேலும் அல்லாஹ்வை இறைவனாகவும் முஹம்மதை தூதராகவும் இஸ்லாத்தை மார்க்கமாகவும் நான் பொருந்திக் கொண்டேன்.)

**ஆ. மறுமையில் நபியின் பரிந்துரை கிடைக்கும்**

“பாங்கு சொல்வதைக் கேட்கும்போது ‘அல்லாஹம்ம ரப்ப ஹாதிஹித் த:வதித் தாம்மதி வஸ்ஸலாத்தில் காயிமதி ஆத்தி முஹம்மதனில் வஸீலத வல்:பழீலத வப்அஸ்ஹ மகாமம் மஹ்மூதனில்லதீ வஅத்தஹ்’ என்று கூறுபவருக்கு

மறுமையில் அவசியம் எனது பரிந்துரை கிடைக்கும்” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: ஜாபிர் (ரலி), நூல்: புகாரி (614)

اَللَّهُمَّ رَبَّ هَذِهِ الدَّعْوَةِ التَّامَّةِ وَالصَّلاَةِ الْقَائِمَةِ آتِ مُحَمَّدَ ا۟لْوَسِيْلَةَ وَالْفَضِيْلَةَ

وَابْعَثْهُ مَقَامًا مَحْمُوْدَ ا۟لَّذِيْ وَعَدتَّهُ

(பொருள்: இறைவா! இந்த முழுமையான அழைப்பு மற்றும் நிலையான தொழுகையின் இரட்சகனே! முஹம்மத் நபி அவர்களுக்குப் பிரத்தியேக நெருக்கத்தையும் சிறப்பையும் வழங்குவாயாக. மேலும் ‘மகாம் மஹ்மூத்’ எனும் புகழுக் குரியதோர் இடத்தில் அவர்களை எழுப்புவாயாக. அவ்வாறே நீ வாக்குறுதி அளித்துள்ளாய்.)

### 7. தொழுகைக்கு நடந்து செல்லுதல்

தொழுகைக்காக நடந்து செல்வதில் உன்னதமான நன்மைகள் நிறைந்து காணப்படுகின்றன. அவை ஒரு முஸ்லி மினுடைய நன்மையின் கணக்குகளை அதிகப்படுத்துகின்றன. அவற்றை சுருக்கமாகத் தருகிறோம்:

### அ. சொர்க்கத்தில் உபசரிப்பு

“பள்ளிவாசலுக்கு ஒருவர் காலையிலோ மாலையிலோ சென்றால், அப்படி அவர் காலையிலும் மாலையிலும் செல்லும் போதெல்லாம் சொர்க்கத்தில் ஓர் உபசரிப்பை அல்லாஹ் அவருக்காக தயார் செய்கிறான்” என நபி (ஸல்) கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹ□ரைரா (ரலி), புகாரி-662, முஸ்லிம்-669

**ஆ. பாவங்கள் அழிக்கப்படுதல், பதவிகள் உயர்த்தப்படுதல்**

**“**யார் தனது வீட்டில் உளுச் செய்துவிட்டு பிறகு அல்லாஹ்வின் கடமைகளில் ஒரு கடமையை நிறை வேற்றுவதற்காக அல்லாஹ்வின் இல்லங்களில் ஏதேனும் ஒன்றை நோக்கி நடக்கிறாரோ அவர் எடுத்து வைக்கும் இரு எட்டுக்களில் ஒன்று ஒரு தீமையை அழிக்கின்றது, மற்றொன்று ஓர் அந்தஸ்தை உயர்த்துகின்றது**”** என நபி(ஸல்) கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரலி), நூல்: முஸ்லிம்(666)

**இ. அதிகமான கூலி**

**“**தொழுகையில் மக்களிலேயே அதிகக் கூலி பெறுபவர் யாரெனில், அவர்களிலேயே யார் மிக தூரத்திலிருந்து அதற்காக நடந்து வருகிறாரோ அவர் தான். பிறகு யார் அதிக தூரத்திலிருந்து வருகிறாரோ அவர்தான். (ஜமாஅத்) தொழுகையை எதிர்பார்த்திருந்து இமாமுடன் தொழுபவர் தனியாகத் தொழுதுவிட்டு தூங்கிவிடுபவரை விட அதிகக் கூலி பெறுபவர்**”** என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூமூஸா(ரலி), புகாரி-651, முஸ்லிம்-662

**ஈ. மறுமையில் பரிபூரணமான ஒளி**

**“**பள்ளிவாசல்களுக்கு இருளில் அதிகம் நடந்து வருபவர்களுக்கு மறுமை நாளில் பரிபூரணமான ஒளி உண்டு என்று நற்செய்தி கூறுங்கள்**”** என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: புரைதா(ரலி), அபூதாவூத்-561, திர்மிதி-223

**உ. தீமைகள் அழிக்கப்படுதல், பாவங்கள் மன்னிக்கப்படுதல்**

“எந்தக் காரியங்கள் மூலம் அல்லாஹ் பாவங்களை அழித்து பதவிகளை உயர்த்துவானோ அவற்றை நான் உங்களுக்கு அறிவிக்கட்டுமா?” என நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அதற்குத் தோழர்கள் ‘அல்லாஹ்வின் தூதரே! அறிவியுங்கள்’ என்றனர். உடனே நபி (ஸல்) அவர்கள், “சிரமமான நேரங்களிலும் உளூவைப் பூரணமாகச் செய்வது, பள்ளிவாசல்களுக்கு அதிகம் நடந்து செல்வது, ஒரு தொழு கைக்குப் பிறகு மறு தொழுகையை எதிர்பார்ப்பது. இது தான் எல்லையைப் பாதுகாப்பது, இது தான் எல்லையைப் பாதுகாப்பது” என்று கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹு ரைரா (ரலி), நூல்: முஸ்லிம் (251)

**ஊ. தர்மம்**

“...அழகிய வார்த்தை தர்மமாகும். தொழுகைக்காக எடுத்து வைக்கும் ஒவ்வொரு எட்டும் தர்மமாகும்...” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹு ரைரா (ரலி), நூல்: முஸ்லிம் (1009)

**8. முதல் வரிசைக்கு முந்துதல், வரிசைகளின் வலது புறத்தில் நிற்குதல்**

இதற்கும் பல்வேறு சிறப்புக்கள் உள்ளன.

**அ. மிகப் பெரும் சிறப்பு**

முதல் வரிசையில் தொழுவதற்கு ஆர்வம் கொள்வதற்கு மிகப் பெரும் சிறப்பு உள்ளது. இதற்குரிய நன்மை என்ன வென்பதை நபி (ஸல்) அவர்கள் குறிப்பிடாமலிருப்பதே முதல் வரிசைக்கு மகத்தான சிறப்பு இருக்கிறது என்பதனால் தான்.

“பாங்கிலும் முதல் வரிசையிலும் உள்ள நன்மைகளை மக்கள் அறிவார்களானால் பிறகு (அதில் யாருக்கு முன்னுரிமை கொடுப்பது எனும் நிலையில்) சீட்டுக் குலுக்கி எடுத்தே தீர்வு காண முடியும் என்று அவர்கள் கருதினால் சீட்டுக் குலுக்கலில் ஈடுபடுவார்கள். தொழுகையை ஆரம்ப நேரத்தில் நிறைவேற்றுவதில் உள்ள நன்மையை அறிவார்களானால் அதற்காக முந்திச் செல்வர்” என்று நபி (ஸல்) கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹு□ரைரா (ரலி), புகாரி-615, முஸ்லிம்-437

இந்த ஹதீஸில் முதல் வரிசைக்குரிய சிறப்பு என்ன என்பதை நபி (ஸல்) அவர்கள் தெளிவுபடுத்தாமல் பொதுப் படையாக விட்டிருப்பதற்குக் காரணம் ஒரு வகையான மிகைப் பாட்டை அந்த வாசகம் உணர்த்த வேண்டும். மேலும் அந்தச் சிறப்பு இன்னதென்று வர்ணிக்க முடியாத வகையைச் சார்ந்தது என்று காட்ட வேண்டும் என்பதற்காகத் தான். இல்லையெனில் சிறப்பையும் பரகத்தையும் தெளிவுபடுத்தி யிருப்பார்கள்.

**ஆ. வானவர்களுக்கு ஒப்பாகுதல்**

நபி (ஸல்) அவர்கள் (தொழுகை நடத்த) எங்களிடம் வந்தார்கள். “வானவர்கள் தம் இறைவனிடம் அணிவகுத்து நிற்பதைப்போல நீங்கள் அணிவகுத்து நிற்க மாட்டீர்களா?” என்று கேட்டார்கள். ‘அல்லாஹ்வின் தூதரே! வானவர்கள் தங்கள் இறைவனிடம் எப்படி அணிவகுத்து நிற்பார்கள்?’ என்று நாங்கள் கேட்டோம். அதற்கு நபி (ஸல்) அவர்கள், “முதல் வரிசையைப் பூர்த்தி செய்வார்கள். வரிசையில்

சேர்ந்து (இடைவெளியின்றி) நெருக்கமாக நிற்பார்கள்" என்று கூறினார்கள்.

அறிவிப்பவர்: ஜாபிர் பின் ஸமுரா (ரலி), முஸ்லிம் (430)

**இ. ஆண்களுக்குத் தனிச் சிறப்பு**

"ஆண்களின் வரிசைகளில் சிறந்தது முதல் வரிசையாகும். அதில் கெட்டது கடைசி வரிசையாகும். பெண்களின் வரிசைகளில் சிறந்தது கடைசி வரிசையாகும். அதில் கெட்டது முதல் வரிசையாகும்" என நபி (ஸல்) கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹு□ரைரா (ரலி), நூல்: முஸ்லிம் (440)

**ஈ. நபி (ஸல்) அவர்களின் எச்சரிக்கையை விட்டும் விலகுதல்**

தம் தோழர்கள் (முன் வரிசைக்கு வராமல்) பின்தங்கி இருப்பதைக் கண்ட நபி (ஸல்) அவர்கள், "முன்னால் வாருங்கள் என்னைப் பின்பற்றுங்கள். உங்களுக்குப் பின்னால் உள்ளவர்கள் உங்களைப் பின்பற்றட்டும். மக்கள் பிந்திக்கொண்டே செல்வார்களானால் அல்லாஹ்வும் அவர்களை (தனது அருளை விட்டும்) பிற்படுத்திவிடுவான்" என்று கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஸயீத் (ரலி),

நூல்: முஸ்லிம் (438)

**உ. முதல் வரிசையில் நிற்பவர்களுக்கு அல்லாஹ்வின் அருளும் வானவர்களின் பிரார்த்தனையும்**

நபி (ஸல்) அவர்கள் வரிசையில் ஒரு ஓரத்திலிருந்து மறு ஓரம் வரை புகுந்து எங்கள் நெஞ்சுகளையும் தோள் புஜங்களையும் தடவி வரிசையைச் சரி செய்வார்கள். மேலும் "வரிசைகளில் (முன் பின் என) முரண்பட்டு நிற்காதீர்கள்!

உங்கள் உள்ளங்கள் முரண்பட்டுவிடும். முதல் வரிசையில் நிற்பவர்களுக்கு அல்லாஹ் அருள் புரிகிறான். அவனுடைய வானவர்களும் அருள் வேண்டிப் பிரார்த்திக்கின்றனர்" என்று கூறுவார்கள். அறிவிப்பவர்: பர்ராஉ பின் ஆஸிப் (ரலி),
அபூதாவூத் (664), நஸயீ (802)

**9. ராத்திப்-வழமையான சுன்னத்துகளைத் தொழுதல்**

ராத்திப் (வழமையான) சுன்னத்துகளைப் பேணித் தொழுவதற்கு மகத்தான நன்மையுண்டு.

**அ. ராத்திப் (வழமையான) சுன்னத்துகளை பேணித் தொழுவது சொர்க்கத்தில் ஒரு மாளிகை கிடைப்பதற்கு வழிவகுக்கும்**

"ஒரு முஸ்லிமான அடியான் ஒரு நாளைக்கு பன்னிரண்டு ரக்அத் உபரியாக அல்லாஹ்வுக்காகத் தொழுதால் அவனுக்காக அல்லாஹ் சொர்க்கத்தில் ஒரு மாளிகையைக் கட்டுகிறான். அல்லது அவனுக்காக சொர்க்கத்தில் ஒரு மாளிகை எழுப்பப்படும்" என நபி (ஸல்) கூறினார்கள்.

அறிவிப்பவர்: உம்மு ஹபீபா (ரலி), நூல்: முஸ்லிம் (728)

ராத்திப்- வழமையான சுன்னத்துகளில் முன் சுன்னத் துகளும் உள்ளன, பின் சுன்னத்துகளும் உள்ளன. அவை மொத்தம் பன்னிரண்டு ரக்அத்துகள்.

**ராத்திப் சுன்னத்துகளில் முன் சுன்னத்துகள்:**

1. பஜ்ருக்கு முன் இரண்டு ரக்அத்

**“**பஜ்ருடைய இரண்டு ரக்அத் இந்த உலகம் மற்றும் அதிலுள்ள அனைத்தையும் விடச் சிறந்ததாகும்**”** என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்**.**

அறிவிப்பவர்**:** ஆயிஷா (ரலி)**,** நூல்**:** முஸ்லிம் (725)

இந்த நபிமொழியை சிந்தித்துப் பாருங்கள்! பஜ்ருடைய சுன்னத் இந்த உலகத்தை விட இன்னும் அதிலுள்ள செல்வங்கள்**,** மாடமாளிகைகள்**,** வாகனங்கள் மற்றும் எல்லா வற்றையும் விடச் சிறந்ததாகும்**.**

2. லுஹருக்கு முன் நான்கு ரக்அத்

**ராத்திப் சுன்னத்துகளில் பின் சுன்னத்துகள்:**

1. லுஹருக்குப் பின் இரண்டு ரக்அத்
2. மஃக்ரிபுக்குப் பின் இரண்டு ரக்அத்
3. இஷாவுக்குப் பின் இரண்டு ரக்அத்

**ஆ. அஸருக்கு முன் நான்கு ரக்அத்துகளைப் பேணித் தொழுவது அருளை வேண்டி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் செய்த பிரார்த்தனையில் நம்மைச் சேர்க்கும்.**

இப்னு உமர் (ரலி) அறிவிக்கிறார்கள்**: “**அஸருக்கு முன் நான்கு ரக்அத் தொழுதவருக்கு அல்லாஹ் அருள் புரிவானாக!**”** என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்**.**

நூல்**:** அபூதாவூத் (1271)**,** திர்மிதி (430)

## 10. பாங்கிற்கும் இகாமதிற்கும் இடையில் பிரார்த்தனை செய்தல்

தொழுகைகளுக்கு சீக்கிரம் செல்வது பாங்கிற்கும் இகாமத்திற்கும் இடையில் துஆச் செய்வதற்கான சந்தர்ப் பத்தை உங்களுக்கு வழங்குகிறது. இந்த நேரத்தில் கேட்கப்படும் துஆ அங்கீகரிக்கப்படுவதற்குரிய நேரங்களில் உள்ளதாகும். இது தன்னளவில் ஒரு பொக்கிஷமாகும். இந்த நேரத்தில் துஆ செய்வதை ஓர் அரிய பாக்கியமாகக் கருதுவது கடமையாகும். எனவே இந்த நேரத்தில் பள்ளி வாசலில் இருப்பது மற்ற இடங்களில் இருப்பதை விடவும் துஆ ஏற்றுக் கொள்ளப்படுவதற்கு ஏற்றதாகும். பள்ளி வாசலுக்குரிய சிறப்பே இதற்குக் காரணமாகும். மட்டுமல்ல அவன் (ஜமாஅத்) தொழுகையை எதிர்பார்த்துக் கொண்டு இருக்கும்போதெல்லாம் தொழுகையிலேயே இருக்கிறான் என்பதும் ஒரு காரணம். மேலும் நபி(ஸல்)அவர்கள் கூறியுள் ளார்கள்: "பாங்கிற்கும் இகாமத்திற்குமிடையில் கேட்கப்படும் துஆ நிராகரிக்கப்பட மாட்டாது."

அறிவிப்பவர்: அனஸ்(ரலி), அபூதாவூத்-521, திர்மிதி-212,

## 11. தொழுகையை எதிர்பார்த்திருத்தல்

முன்னேரத்திலிருந்தே ஜமாஅத் தொழுகையை எதிர்பார்த் திருப்பது ஏராளமான நன்மைகளை சம்பாதிக்கத் தகுதி யுடையவர்களாக உங்களை ஆக்குகிறது.

### அ. தொழுகையில் இருப்பதற்குரிய சிறப்பு

தொழுகையை எதிர்பார்த்திருப்பது தொழுகையில் இருப்பதற்குரிய சிறப்புக்கு நிகரானதாகும்.

“உங்களில் ஒருவரைத் தொழுகை தடுத்து வைத்திருக்கும் வரை அவர் தொழுகையிலேயே இருக்கிறார்...” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹு□ரைரா (ரலி), புகாரி-3229, முஸ்லிம்-649

**ஆ. வானவர்கள் பாவமன்னிப்புத் தேடுதல்**

“ஒரு அடியார் தொழுகையை எதிர்பார்த்து தொழும் இடத்தில் இருக்கும் வரை தொழுகையிலேயே இருக்கிறார். அவர் திரும்பிச் செல்கின்ற வரை அல்லது உளூ முறிகின்ற வரை அவருக்காக வானவர்கள், ‘இறைவா! இவரை மன்னிப்பாயாக! இவருக்கு அருள் புரிவாயாக!’ என்று பிரார்த்தித் வண்ணம் இருப்பார்கள்.” (நபிமொழி) அறிவிப்பவர்: அபூஹு□ரைரா (ரலி), முஸ்லிம்-649, அபூதாவூத்-471

‘வானவர்கள் ஒரு மனிதருக்காக துஆ செய்கிறார்கள் எனில் அப்படி அவருக்காக அவர்கள் செய்யும் துஆவை அல்லாஹ் அங்கீகரிக்கும் அளவுக்கு அவர் தகுதியுடையவராகிறார்.’ (அஷ்ஷரஹ் அல்மும்தி:ஃ-இப்னுல் உஸைமீன்)

**இ. பாவங்கள் அழிக்கப்படுதல், பதவிகள் உயர்த்தப்படுதல்**

“எந்தக் காரியங்கள் மூலம் அல்லாஹ் பாவங்களை அழித்து பதவிகளை உயர்த்துவானோ அவற்றை நான் உங்களுக்கு அறிவிக்கட்டுமா?” என நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அதற்குத் தோழர்கள் ‘அல்லாஹ்வின் தூதரே! அறிவியுங்கள்’ என்றனர். உடனே நபி (ஸல்) அவர்கள், “சிரமமான நேரங்களிலும் உளூவைப் பூரணமாகச் செய்வது, பள்ளிவாசல்களுக்கு அதிகம் நடந்து செல்வது, ஒரு தொழு

கைக்குப் பிறகு மறு தொழுகையை எதிர்பார்ப்பது. இது தான் எல்லையைப் பாதுகாப்பது, இது தான் எல்லையைப் பாதுகாப்பது" என்று கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹு□ரைரா (ரலி), நூல்: முஸ்லிம் (251)

## 12. திக்ரு மற்றும் குர்ஆன் ஓதுவதில் ஈடுபடுதல்

முன்னேரத்திலேயே பள்ளிவாசலுக்குச் செல்பவர் திக்ரு, குர்ஆன் ஓதுதல், அல்லாஹ்வின் அருட்கொடைகளை சிந்தித்தல், உலகத்தை விட்டும் அதன் கவலைகளை விட்டும் (சிறிது நேரத்திற்கு) ஒதுங்கி இருத்தல் போன்ற பல்வேறு வணக்க வழிபாடுகளைச் செய்து அல்லாஹ்வை நெருங்க முடியும். ஏனெனில் இது தொழுகையில் முழு ஈடுபாடு கொள் வதற்கும் அதில் பயபக்தியை மேற்கொள்வதற்கும் மிகப் பெரிய தூண்டு கோலாக ஆகிறது. ஆனால் தாமதமாக வரக்கூடிய வருக்கு இந்த நன்மைகள் கிடைக்கப் போவதில்லை. ஏனெனில் அவர் தொழுகிறார். ஆனால் அவரது உள்ளம் அவரது கவலைகளில் மூழ்கியிருக்கும் அல்லது உலக சிந்தனைகளில் ஈடுபட்டிருக்கும். பெரும்பாலும் முழு ஈடுபாட் டுடன் தொழுகையில் ஈடுபட மாட்டான்.

சகோதரர்களே! சில பொன்னான சந்தர்ப்பங்கள் குறித்து உங்களுக்கு ஒரு யோசனை சொல்கிறேன். தொழுகையை எதிர்பார்த்திருக்கும் நேரத்தில் இவற்றின் மூலம் நீங்கள் பயனடையலாம்- உங்கள் நன்மையின் கணக்குகளை உயர்த் தலாம். இது ஒரு உதாரணத்திற்காகத் தான். இதற்குள் சுருக்கிக் கொள்ள வேண்டும் என்பதல.

**அ. திருக்குர்ஆன் ஓதுதல்**

1. **அளவு:** ஒவ்வொரு தொழுகையிலும் பாங்கிற்கும் இகாமத்திற்கும் இடையில் ஐந்து பக்கங்கள் ஓதுதல். இது தினமும் 25 பக்கங்கள் ஓதுவதற்கு உத்தரவாதம் தருகிறது.

**பலன்:** ஏறக்குறைய 24 நாட்களில் திருக்குர்ஆன் முழுவதையும் ஓதி முடித்துவிடலாம்.

**விபரம்:** (சவூதி அரேபியா பதிப்பின்படி) திருக்குர்ஆனில் மொத்தம் 604 பக்கங்கள். 25 பக்கங்கள் × 24 நாட்கள் = 600 பக்கங்கள்.

2. **அளவு:** தினமும் ஐவேளை தொழுகைகளை எதிர் பார்த்து இருக்கின்ற நேரத்தைப் பயன்படுத்தி ஒரு ஜ□ஸ்வு ஓதுதல்.

**பலன்:** ஏறத்தாழ 30 நாட்களில் குர்ஆனை ஓதி முடித்து விடலாம்.

**விபரம்:** குர்ஆனில் மொத்தம் 30 ஜ□ஸ்வுகள். தினசரி 1 ஜ□ஸ்வு. 1 ஜ□ஸ்வு × 30 நாட்கள் = 30 ஜ□ஸ்வுகள்.

3. **அளவு:** தினசரி ஐவேளை தொழுகைகளை எதிர் பார்த்து இருக்கின்ற நேரத்தைப் பயன்படுத்தி மூன்று வசனங் களை மனனம் செய்தல்.

**பலன்:** குர்ஆனை அல்லாஹ்வினுடைய நாட்டப்படி எட்டு வருடங்களில் மனனம் செய்திடலாம்.

**விபரம்:** அனுபவமே இதற்குச் சான்று

4. **அளவு:** தினமும் ஐவேளை தொழுகைகளை எதிர் பார்த்து இருக்கின்ற நேரத்தைப் பயன்படுத்தி ஒண்ணே கால் பக்கம் மனனம் செய்தல்.

**பலன்:** அல்லாஹ்வின் விருப்பப்படி திருக்குர்ஆனை 1½ வருடத்தில் மனனம் செய்து முடித்திடலாம்.

**விபரம்:** 604 ÷ 1.25 = 483.2 நாட்கள். 483.2 ÷ 30 = 16.10 மாதங்கள். ∴ 1 வருடம் 4 மாதங்கள் 10 நாட்கள்.

5. **அளவு:** ஒவ்வொரு நாளும் ஜமாஅத் தொழுகைகளை எதிர்பார்த்து இருக்கின்ற நேரத்தைப் பயன்படுத்தி இரண்டு பக்கங்கள் மனனம் செய்தல்.

**பலன்:** திருக்குர்ஆனை ஒரே வருடத்தில் மனனம் செய்து முடித்திடலாம். இன்ஷா அல்லாஹ்!

**விபரம்:** 604÷2=302 நாட்கள். அதாவது 10 மாதங்கள்.

6. **அளவு:** குல் ஹ□வல் லாஹ□ அஹத் மூன்று தடவை ஓதுதல்.

**பலன்:** குர்ஆன் முழுவதையும் ஓதி முடித்த சிறப்புக்கு நிகரானதாகும்.

**விபரம்:** “ஒரு இரவில் குர்ஆனில் மூன்றில் ஒரு பகுதியை உங்களில் யாருக்கேனும் ஓத முடியாமல் போகுமா?” என்று நபி (ஸல்) அவர்கள் தமது தோழர்களிடம் கேட்டபோது அது அவர்களுக்கு சிரமமாக இருந்தது, ‘அல்லாஹ்வின் தூதரே! எங்களில் யாருக்கு அது இயலும்?’ என்று அவர்கள் கேட்டனர். அதற்கு நபியவர்கள் “குல் ஹ□வல்லாஹ□ அஹத் குர்ஆனில் மூன்றில் ஒரு பாகமாகும்” என்று கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஸயீத் (ரலி), நூல்: புகாரி (5015)

7. **அளவு:** குல் யாஅய்யுஹல் கா∴பிரூன் நான்கு தடவை ஓதுதல்.

**பலன்:** குர்ஆன் முழுவதையும் ஓதி முடித்த சிறப்புக்கு சமமானதாகும்.

**விபரம்:** "குல் ஹு□வல்லாஹு□ அஹத் குர்ஆனில் மூன்றில் ஒரு பகுதிக்குச் சமமானதாகும். குல் யாஅய்யுஹல் கா.ஃபிரூன் குர்ஆனில் நான்கில் ஒரு பகுதிக்கு ஈடானதாகும்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: இப்னு உமார் (ரலி), நூல்: ஸில்ஸிலதுல் அஹாதீஸ□ஸ் ஸஹீஹா-அல்பானி

8. **அளவு:** ஸ□ரதுல் முல்க் 1 தடவை ஓதுதல்.

**பலன்:** பாவங்கள் மன்னிக்கப்படும்.

**விபரம்:** "குர்அனில் 30 வசனங்கள் உள்ளன. (அவற்றை ஓதிய) ஒரு மனிதனுக்கு அவனது பாவங்கள் மன்னிக் கப்படும் வரை அவை பரிந்துரை செய்யும். அவை தபார கல்லதீ பியதிஹில் முல்கு ஆகும்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹு□ரைரா (ரலி),

நூல்: திர்மிதி (திர்மிதி அவர்கள் இதை ஹஸன் என்று கூறியுள்ளார்கள். ஹாகிம் அவர்கள் இதனை சரி கண்டுள் ளார்கள். தஹபீ அவர்களும் இதற்கு உடன்பட்டுள்ளார்கள்.)

நாம் இன்னமும் நற்கூலிகளின் பூங்காவில் இருந்து கொண்டிருக்கிறோம். இதோ திருக்குர்ஆனை ஓதுவதற்குரிய மகத்தான சிறப்பை என்னுடன் சேர்ந்து நீங்களும் சிந்தித்துப் பாருங்கள்!

"அல்லாஹ்வின் வேதத்தில் ஒரு எழுத்தை ஓதியவருக்கு ஒரு நன்மையுண்டு. ஒரு நன்மைக்கு அது போன்று பத்து மடங்கு கூலியாகும். அலி.ஃப் லாம் மீம் என்பதை ஒரு

எழுத்து என்று சொல்ல மாட்டேன். மாறாக அலி∴ப் ஒரு எழுத்து. லாம் ஒரு எழுத்து. மீம் ஒரு எழுத்தாகும்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: இப்னு மஸவூத் (ரலி), நூல்: திர்மிதி (2910)

உதாரணமாக திருக்குர்ஆனில் மிகச் சிறிய அத்தியாயம் கவ்ஸர். அதிலுள்ள மொத்த எழுத்துக்கள் 42. ஒரு எழுத்துக்குப் பத்து நன்கைள் எனில் $42 \times 10 = 420$ நன்மைகள்.

திருக்குர்ஆனில் மிகச் சிறிய அத்தியாயத்திற்கு (கவ்ஸர்) கிடைக்கக்கூடிய இந்த மாபெரும் சிறப்பை சிந்தித்துப் பாருங்கள். அப்படியானால் ஜமாஅத் தொழுகைகளை எதிர்பார்த்து இருக்கின்ற நேரத்தில் திருக்குர்ஆனில் பல பக்கங்களை நீங்கள் ஓதினால் எவ்வளவு நன்மைகள் உங்களுக்கு எழுதப்படும்?!

### ஆ. திக்ரு

1. **திக்ரு:** சுப்ஹானல் லாஹ் 100 தடவை கூறுதல்

**சிறப்பு/நன்மை:** ஆயிரம் நன்மை அல்லது ஆயிரம் பாவங்கள் மன்னிக்கப்படும்.

**ஆதாரம்:** நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் இருக்கும் போது "உங்களில் யாருக்கேனும் தினமும் ஆயிரம் நன்மை களைச் சம்பாதிக்க முடியாமல் போகுமா?" என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அப்போது அங்கிருந்தவர்களில் ஒருவர் 'எங்களில் ஒருவர் தினமும் ஆயிரம் நன்மைகளை எப்படி சம்பாதிக்க முடியும்?' என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அவர் நூறு தடவை தஸ்பீஹ் செய்தால்

அவருக்கு ஆயிரம் நன்மைகள் எழுதப்படும் அல்லது ஆயிரம் பாவங்கள் அழிக்கப்படும்" என்று கூறினார்கள்.

அறிவிப்பவர்: ஸஅத் (ரலி), நூல்: முஸ்லிம் (2698)

(தஸ்பீஹ் செய்தல் என்றால் சுப்ஹானல்லாஹ் என்று கூறுவதாகும். )

2. **திக்ரு:** லாயிலாஹ இல்லல்லாஹ□ வஹ்தஹ□ லாஷ ரீக்கலஹ□ லஹ□ல் முல்கு வலஹ□ல் ஹம்து வஹ□வ அலா குல்லி ஷையின் கதீர் என்று 100 தடவை ஓதுதல்

**சிறப்பு/நன்மை:** 10 அடிமைகளை விடுதலை செய்ததற்கு நிகரானது + 100 நன்மைகள் + 100 பாவங்கள் மன்னிக் கப்படுல் + ஷைத்தானிடம் இருந்து பாதுகாப்பு.

**ஆதாரம்:** "லாயிலாஹ இல்லல்லாஹ□ வஹ்தஹ□ லாஷரீக்கலஹ□ லஹ□ல் முல்கு வலஹ□ல் ஹம்து வஹ□வ அலா குல்லி ஷையின் கதீர்" என்று ஒரு நாளைக்கு நூறு தடவை யார் கூறுகிறாரோ அவருக்கு பத்து அடிமைகளை விடுதலை செய்ததற்கு நிகரான கூலி உண்டு. மேலும் அவருக்கு நூறு நன்மைகள் எழுதப்பட்டு நூறு பாவங்கள் மன்னிக்கப்படும். மேலும் மாலை வரை அது அவருக்கு ஷைத்தானை விட்டும் பாதுகாப்பாக அமையும். (மறுமையில்) அவருக்குக் கிடைக்கும் நன்மையை விடச் சிறந்தது யாருக்கும் கிடைக்காது. ஆயினும் ஒருவர் அவர் செய்ததை விடக் கூடுதலாகச் செய்தாலே தவிர என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹ□ரைரா (ரலி),

நூல்: புகாரி (3293), முஸ்லிம் (2691)

لاَ إِلَهَ إِلاَّ اللهُ وَحْدَهُ لاَ شَرِيْكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ

பொருள்: வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு யாதொரு இணையுமில்லை. ஆட்சியதிகாரம் அவனுக்கே. புகழனைத்தும் அவனுக்குரியதே. அவன் அனைத்தின் மீதும் ஆற்றலுள்ளவன்.

3. **திக்ரு:** லாஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹ் என்று கூறுதல்

**சிறப்பு/நன்மை:** சொர்க்கத்தின் புதையல்களில் ஒன்று

**ஆதாரம்:** “சொர்க்கத்தின் புதையல்களில் ஒன்றை உமக்கு அறிவிக்கட்டுமா?” என்று நபி (ஸல்) அவர்கள் என்னிடம் கேட்டார்கள். நான் ‘ஆம்’ என்றேன். “அது லாஹவ்ல வலா குவ்வத இல்லா பில்லாஹ் ஆகும்” என்று கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூமூஸா (ரலி), புகாரி-6409, முஸ்லிம்-2704

لاَ حَوْلَ وَلاَ قُوَّةَ إِلاَّ بِاللهِ

(பொருள்: நன்மையைச் செய்வதும் தீமையிலிருந்து விலகுவதும் அல்லாஹ்வைக் கொண்டே தவிர வேறில்லை. )

4. **திக்ரு:** சுப்ஹானல்லாஹில் அழீம் வபிஹம்திஹி என்று கூறுதல்.

**சிறப்பு/நன்மை:** சொர்க்கத்தில் ஒரு ஈச்சை மரம் நடப்படும்.

**ஆதாரம்:** “சுப்ஹானல்லாஹில் அழீம் வபிஹம்திஹி என்று கூறியவருக்கு சொர்க்கத்தில் ஒரு பேரீச்ச மரம் நடப்படும்” என்பது நபிமொழி.

அறிவிப்வர்: ஜாபிர் (ரலி), நூல்: திர்மிதி (3464)

5. **திக்ரு:** மு∴மினான ஆண்கள் மற்றும் பெண்களுக்காக பாவமன்னிப்புத் தேடுதல்

**சிறப்பு/நன்மை:** அவர்கள் ஒவ்வொருக்குப் பகரமாக ஒரு கூலி அவருக்கு உண்டு.

**ஆதாரம்:** "மு∴மினான ஆண்களுக்காகவும் பெண்களுக் காகவும் யார் பாவ மன்னிப்புத் தேடுகிறாரோ அவர்களில் ஒவ்வொருவருக்குப் பகரமாக ஒரு கூலியை அல்லாஹ் அவருக்கு எழுதிவிடுகிறான்" என நபி (ஸல்) கூறினார்கள்.

அறிவிப்பவர்: உப்பாதா பின் ஸாமித் (ரலி),

நூல்: தப்ரானி, பார்க்க: மஜ்மஉஸ்ஸவாயித் பாகம்-10, பக்கம்-210, அல்பானி இதை ஹஸன் என்று கூறியுள்ளார்.

இந்த அரிய சந்தர்ப்பத்தில் சிறப்புக்குரிய இந்த இடத்தில் (பள்ளிவாசலில்) அமர்ந்து இத்தகைய திக்ருகளில் ஈடுபடுவதே ஒரு முஸ்லிமுக்கு அதிலும் குறிப்பாக தொழு கையை எதிர்பார்த்திருப்பவருக்கு முறையாகும். அதிக அளவு நன்மைகளையும் நற்கூலிகளையும் சம்பாதிப்பதற்காக.

## 13. வரிசைகளை நேராக்குதல்

தொழுகையை நிறைவேற்றுவதற்குத் தயாராகும் வகையில் வரிசைகளை நேராக்குவது கடமையாகும். வரிசைகளை நேராக்குவதற்கு ஏராளமான சிறப்புகள் உள்ளன. அவற்றில் சில:

### அ. உள்ளங்களும் நோக்கங்களும் ஒன்றுபடுதல்

“உங்கள் வரிசைகளை நேராக்கிக் கொள்ளுங்கள். இல்லையெனில் அல்லாஹ் உங்களுக்கிடையே வேற்றுமையை உருவாக்கிவிடுவான்” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: நுஃமான் பின் பஷீர் (ரலி),
நூல்: புகாரி (717), முஸ்லிம் (436)

இதன் கருத்து, “உங்களுக்கிடையே விரோதத்தையும் குரோதத்தையும் உள்ளங்களுக்கிடையில் வேற்றுமையையும் தோற்றுவித்துவிடுவான்” என்பதாகும் என்று இமாம் நவவி (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள். ஆக வரிசைகளை நேராக்காமல் விட்டுவிடுவதால் பாவமும் மக்களிடையே வேற்றுமையும் ஏற்படும் என்பது வெள்ளிடைமலை.

### ஆ. தொழுகையை நிலைநாட்டுவதன் ஓர் அம்சமாகக் கருதப்படுதல்

“உங்கள் வரிசைகளை நேராக்குங்கள். ஏனெனில் வரிசைகளை நேராக்குவது தொழுகையை நிலைநாட்டுவதன் ஓர் அம்சமாகும்” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: அனஸ் (ரலி), நூல்: புகாரி (723)

எனவே வரிசைகளை நேராக்குவது தொழுகைக்கு அவசியமானதாகக் கருதப்படுகிறது. தொழுகைக்கு அவசியமானதை விடுபவன் குற்றவாளியாவான்.

### இ. ஷைத்தான்களுக்கு நெருக்கடியை ஏற்படுத்துதல்

“வரிசைகளை நேராக்குங்கள், தோள் புஜங்களுக்கு நேராக நில்லுங்கள், இடைவெளியை அடைத்து நில்லுங்கள், உங்கள் சகோதரர்களின் கரங்களில் மென்மையாக நடந்து

கொள்ளுங்கள், ஷைத்தான்களுக்கு இடைவெளியை விட்டு விடாதீர்கள்...” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: இப்னு உமர் (ரலி),
நூல்: அபூதாவூத் (666) -ஸஹீஹ் அல்பானி

**ஈ. வரிசையில் இணைந்து நிற்பவர்களுடன் அல்லாஹ்வும் இணக்கமாகிறான்**

“...வரிசையில் சேர்ந்து நிற்பவர்களை அல்லாஹ் சேர்த்துக் கொள்வான். வரிசையை விட்டும் விலகி நிர்ப்பவர்களை அல்லாஹ் விலக்கிக் கொள்வான்” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: இப்னு உமர் (ரலி),
நூல்: அபூதாவூத் (666) -ஸஹீஹ் அல்பானி

## முதல் புதையலின் சுருக்கம்:

**1. உளு செய்தல்**

**நற்கூலிகள்:** அ. இறைநேசம். ஆ. உளுவின் தண்ணீருடன் பாவங்கள் வெளியேறுதல். இ. மறுமை நாளில் உளுவின் உறுப்புக்களில் ஒளி வீசுதல். ஈ. பாவங்கள் அழிக்கப்பட்டு பதவிகள் உயர்த்தப்படுதல் உ. பாவங்கள் அழிக்கப்படுதலும் சொர்க்கம் செல்லுதலும்.

**2. உளு செய்த பின் திக்ரு செய்தல்**

**நற்கூலிகள்:** அ. சொர்க்கத்தின் எட்டு வாயில்களில் எந்த வாயில் வழியாகவும் சொர்க்கத்தில் நுழைதல். ஆ. அதன் நன்மைகள் ஒரு ஏட்டில் எழுதப்பட்டு முத்தியிரை

யிடப்படும். பிறகு கியாமத் நாள் வரை அது பிரிக்கப்பட மாட்டாது.

**3. பல் துலக்குதல்**

**நற்கூலிகள்:** வாயை சுத்தப்படுத்துகிறது. இறைவனுக்கு விருப்பமானது.

**4. தொழுகைக்காக சீக்கிரம் செல்லுதல்**

**நற்கூலிகள்:** அ. மிகப் பெரிய சிறப்பும், நன்மையும் பரகத்தும் உண்டு. ஆ. அல்லாஹ்வின் நிழலைத் தவிர வேறு நிழல் இல்லாத (மறுமை) நாளில் அல்லாஹ் நிழல் கொடுத்தல் (அவரது உள்ளம் பள்ளியோடு சம்பந்தப்படுகிறது எனும் வகையில்). இ. (ஜ□ம்ஆ தொழுகைக்காக முன்னேரத்திலேயே செல்வது) ஒவ்வொரு எட்டுக்குப் பகரமாக ஒரு வருடம் நோன்பு நோற்று நின்று வணங்கிய கூலி.

**5. பாங்கு சொல்லப்படும்போது திரும்பச் சொல்லுதல்**

**நற்கூலி:** சொர்க்கம் செல்லுதல்.

**6. பாங்கிற்குப் பிறகு திக்ரு செய்தல்**

**நற்கூலிகள்:** அ. பாவங்கள் மன்னிக்கப்படுதல். ஆ. மறுமையில் நபி (ஸல்) அவர்களின் பரிந்துரை.

**7. தொழுகைக்காக நடந்து செல்லுதல்**

**நற்கூலிகள்:** அ. சொர்க்கத்தில் உபசரிப்பு. ஆ. பாவங்கள் அழிக்கப்பட்டு பதவிகள் உயர்த்தப்படுதல். இ. மகத்தான கூலி. ஈ. மறுமையில் பரிபூரணமான ஒளி உ. தீமைகள் அழிக்கப்படுதல், பாவங்கள் மன்னிக் கப்படுதல். ஊ. ஒவ்வொரு எட்டுக்கும் ஒரு நன்மை.

**8. முதல் வரிசையிலும், வரிசைகளின் வலது பக்கத்திலும் நிற்குதல்**

**நற்கூலிகள்:** அ. வானவர்களுக்கு ஒப்பாகுதல். ஆ. ஆண்களுக்குத் தனிச் சிறப்பு. இ. இறையருளும், அருள் வேண்டி வானவர்களின் பிரார்த்தனையும். ஈ. வரிசையை விட்டும் பிந்திக் கொண்டே செல்பவர்களை அல்லாஹ்வும் தனது அருளை விட்டும் பிற்படுத்திவிடுவான் என்ற எச்சரிக் கையிலிருந்து விலகுதல்.

**9. ராத்திப் சுன்னத்துகளைப் பேணித் தொழுதல்**

**நற்கூலிகள்:** சொர்க்கத்தில் ஒரு மாளிகை எழுப்பப் படுதல். ஆ. அஸருக்கு முன்னால் நான்கு ரக்அத்துகளைத் தொழுவதால் அல்லாஹ்வின் அருள் கிடைத்தல்.

**10. பாங்கு இகாமத்திற்கிடையில் துஆ செய்தல்**

**நற்கூலி:** துஆ அங்கீகரிக்கப்படுதல்.

**11. ஜமாஅத் தொழுகையை எதிர்பார்த்து இருத்தல்**

**நற்கூலிகள்:** அ. தொழுகையில் இருப்பதற்குரிய சிறப்புக்கு ஈடானது. ஆ. வானவர்கள் பாவமன்னிப்புத் தேடுதல். இ. பாவங்கள் அழிக்கப்பட்டு பதவிகள் உயர்த்தப்படுதல்.

**12. தொழுகையை எதிர்பார்த்து இருக்கும் நேரத்தில்**

**அ. குர்ஆன் ஓதுவதில் ஈடுபடுதல்**

**நற்கூலிகள்:** அ. முழுக் குர்ஆனையும் பார்த்து ஓதி முடித்தல். ஆ. குர்ஆன் முழுவதையும் மனனம் செய்தல். இ. ஏராளமான நன்மைகள்.

**ஆ. திக்ருகளில் ஈடுபடுதல்**

**நற்கூலிகள்:** அ. 1000 நன்மைகள் எழுதப்பட்டு 1000 தவறுகள் மன்னிக்கடுதல். ஆ. 10 அடிமைகளை விடுதலை செய்ததற்கு நிகரானது + 100 நன்மைகள் + 100 பாவங்கள் மன்னிக்கப்படுதல் + ஷைத்தானிடம் இருந்து பாதுகாப்பு. இ. சொர்க்கத்தின் புதையல்களில் ஒன்று. ஈ. சொர்க்கத்தில் ஒரு (ஈச்சை) மரம் நடப்படுதல்.

**13. வரிசைகளை நேராக்குதல்**

**நற்கூலிகள்:** அ. உள்ளங்களும் நோக்கங்களும் ஒன்று படுதல். ஆ. தொழுகையை நிலைநாட்டுவதன் ஓர் அம்சம். இ. ஷைத்தான்களுக்கு நெருக்கடியை ஏற்படுத்துதல். ஈ. வரிசையில் சேர்ந்து நிற்பவர்களை அல்லாஹ் சேர்த்துக் கொள்வான்.

## இரண்டாவது புதையல்

### தொழுகையை நிறைவேற்றுதல்

இந்த அரிய புதையல்களை தொழுகையை நிறைவேற்று வதன் ஊடாக நாம் அடைந்து கொள்ளலாம். இதோ இந்தப் புதையல்களைப் பெறுவதற்காக நீங்கள் எடுத்து வைக்கும் எட்டுக்கள்:

**1. தொழுகையின் சிறப்பு**

தொழுகைக்கு பொதுப்படையாக பெரும் சிறப்புகள் உள்ளன. தனிப்பட்ட முறையிலும் சிறப்புகள் உள்ளன. உதாரணமாக ஃபஜ்ரு, அஸ்ரு, இஷாத் தொழுகை களுக்கு இருக்கின்ற சிறப்பைப்போல. பின்வரும் தலைப்பு களின் கீழ் அவற்றைச் சுருக்கமாகத் தருகிறோம்.

### தொழுகைக்குரிய பொதுவான சிறப்புக்கள்

திருக்குர்ஆனும் நபிமொழியும் தொழுகைகளிலுள்ள புதையல்களை நமக்கு வெளியிட்டுள்ளன. அவற்றை அரிய பாக்கியமாகக் கருதுவதும் அத்தொழுகைகளை நிறை வேற்றுவதற்கு நல்லார்வம் கொள்வதும் கடமையாகும்- நம்முடைய நன்மைகள் மற்றும் நற்கூலிகளின் கணக்குகள் அதிகரிப்பதற்காக.

### அ. பதவிகளும் மன்னிப்பும் கண்ணியமான உணவும்

அல்லாஹ் கூறுகிறான்: “அவர்கள் தொழுகையை நிலை நாட்டுவார்கள். நாம் அவர்களுக்கு வழங்கியவற்றிலிருந்து (நல்வழியில்)செலவிடுவார்கள். அவர்கள் தாம் உண்மையான முஃமின்கள். அவர்களுக்கு அவர்களின் இறைவனிடம் பல பதவிகளும் மன்னிப்பும் கண்ணியமான உணவும் உண்டு.” (8:3,4)

“(நபியே!) உமது குடும்பத்தினரைத் தொழுமாறு ஏவுவீராக! அதில் (ஏற்படும் சிரமங்களை) சகித்துக்கொள் வீராக! உம்மிடம் நாம் உணவைக் கேட்கவில்லை. நாமே உமக்கு உணவளிக்கிறோம். நல்ல முடிவு இறையச்சத்திற்கே உண்டு.” (20:132)

### ஆ. பாவங்களுக்குப் பரிகாரம் அல்லது பாவங்கள் மன்னிக்கப்படுதல்

“(நபியே!) பகலின் இரு ஓரங்களிலும் இரவின் பகுதி களிலும் தொழுகையை நிலைநாட்டுவீராக! நன்மைகள் தீமைகளை அழித்துவிடும். இது படிப்பினை பெறுவோருக்குப் படிப்பினையாகும்.” (11:114)

“உங்களில் ஒருவரது (வீட்டு) வாசலில் ஒரு ஆறு ஓடுகிறது எனில் அதில் அவர் தினமும் ஐந்து தடவை குளிக்கிறார் என்றால் அவரது அழுக்குகளில் எதுவும் எஞ்சி யிருக்குமா? என்று கூறுங்களேன்” என நபி(ஸல்) அவர்கள் (தோழர்களிடம்) கேட்டார்கள். அதற்கவர்கள், ‘அவரது அழுக்குகளில் எதுவும் எஞ்சியிராது’ என்றனர். உடனே நபி (ஸல்)அவர்கள், “இது ஐவேளை தொழுகையின் உவமை யாகும். இதன் மூலம் அல்லாஹ் பாவங்களை அகற்றுகிறான்” என்று கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹ□ரைரா (ரலி), புகாரி-528, முஸ்லிம்-667

ஐவேளைத் தொழுகைகளும், ஒரு ஜ□ம்ஆ தொழுது விட்டு இன்னொரு ஜ□ம்ஆ தொழுவதும், ஒரு ரமழானில் நோன்பு நோற்று விட்டு இன்னொரு ரமழானில் நோன்பு நோற்பதும் அவற்றுக்கு இடையிலுள்ள பாவங்களுக்குப் பரிகா ரமாகும். பெரும்பாவங்களை அவன் தவிர்க்கும் பட்சத்தில்! என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹ□ரைரா (ரலி), நூல்: முஸ்லிம் (233)

**இ. அருள்பாலிக்கப்படுதல்**

“தொழுகையை நிலை நாட்டுங்கள்! ஸகாத்தையும் கொடுங்கள்! இத்தூதருக்கும் கட்டுப்படுங்கள்! இதனால் நீங்கள் அருள் செய்யப்படுவீர்கள்” என்று அல்லாஹ் கூறுகிறான். (24:56)

**ஈ. ஃபிர்தௌஸ் எனும் சொர்க்கம் செல்லுதல்**

அல்லாஹ் கூறுகிறான்: “மேலும் அவர்கள் தமது தொழு கைகளைப் பேணிக்கொள்வார்கள். ஃபிர்தௌஸ் எனும்

சொர்க்கத்திற்கு அவர்களே உரிமையாளர்கள். அதில் அவர்கள் நிரந்தரமாக இருப்பார்கள்." (23:9-11)

"அவர்கள் தமது தொழுகையைப் பேணுவார்கள். அவர்களே சொர்க்கச் சோலைகளில் மரியாதை செய்யப் படுவார்கள்." (70:34,35)

**உ. ஒளி**

"...தொழுகை ஒளியாகும். தர்மம் ஆதாரமாகும். பொறுமை பிரகாசமாகும். குர்ஆன் உனக்கு சாதகமான அல்லது பாதகமான சான்றாகும். அதிகாலையில் வாழ்க் கையைத் தொடங்கும் ஒவ்வொரு மனிதனும் தனது ஆன்மாவை வியாபாரத்தில் ஆழ்த்திவிடுகின்றான். ஒன்று அதற்கு விடுதலையைத் தேடித் தருகிறான். அல்லது அதற்கு அழிவைத் தேடித்தருகிறான் என நபி (ஸல்) கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூமாலிக் அல்அஷ்அரி (ரலி), முஸ்லிம் (223)

பொதுவாக தொழுகை ஒளியாகும். இதனால் தான் இறையச்சமுடையோருக்கு தொழுகை கண் குளிர்ச்சியாக அமைந்திருக்கிறது. நபி (ஸல்) கூறுகிறார்கள்: "என்னுடைய கண் குளிர்ச்சி தொழுகையில் அமைந்திருக்கிறது." அறிவிப் பவர்: அனஸ் (ரலி), நூல்: நஸயீ (3878), அஹ்மத் (11845)

**குறிப்பிட்ட சில தொழுகைகளின் சிறப்பு**

**ஃபஜர், அஸர் தொழுகைகளின் சிறப்பு**

**அ. இவ்விரு தொழுகைகளிலும் இரவு நேரத்து வானவர் களும் பகல் நேரத்து வானவர்களும் கலந்து கொள்ளுதல்**

அல்லாஹ் கூறுகிறான்: "ஃபஜ்ரு குர்ஆனையும் நிலை நாட்டுவீராக. ஃபஜ்ரு குர்ஆன் சாட்சி கூறப்படுவதாக இருக்கிறது." (17:78)

ஃபஜ்ரு குர்ஆன் என்பது ஃபஜ்ரு தொழுகையில் குர்ஆன் ஓதுவதே கருத்தாகும். இரவு நேரத்து வானவர்களும் பகல் நேரத்து வானவர்களும் அதற்கு சாட்சி கூறுவார்கள் என்று விரிவுரையாளர்கள் கூறுகின்றனர்.

இரவு நேரத்து வானவர்களும் பகல் நேரத்து வானவர் களும் உங்களிடம் ஒருவர் பின் ஒருவராக வந்து கொண்டி ருப்பார்கள். ஃபஜர் தொழுகையிலும் அஸர் தொழுகையிலும் இருசாரரும் சந்திக்கின்றனர். பின்னர் உங்களுடன் இரவு தங்கியவர்கள் மேலேறிச் செல்கின்றனர். "என் அடியார்களை எந்த நிலையில் விட்டு வந்தீர்கள்?" என்று அவர்களிடம் இறைவன் இதுபற்றி தெரிந்து கொண்டே விசாரிப்பான். "அவர்கள் தொழுது கொண்டிருக்கும்போதே அவர்களிடம் சென்றோம். அவர்கள் தொழுது கொண்டிருக்கும்போதே அவர்களை விட்டு வந்திருக்கின்றோம்" என்று அவர்கள் விடையளிப்பார்கள் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அ: அபூஹ□ரைரா (ரலி), நூல்: புகாரி-555, முஸ்லிம்-632

**ஆ. சொர்க்கம் செல்லுதல்**

"பகலில் வெப்பம் குறைந்த இரண்டு நேரத் தொழு கைகளை (பஜ்ர், அஸர்) யார் தொழுகிறாரோ அவர் சொர்க் கத்தில் நுழைவார்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூமூஸா (ரலி), புகாரி-574, முஸ்லிம்-635

**இ. நரகம் செல்லாதிருத்தல்**

“சூரியன் உதயமாகும் முன்னரும் சூரியன் மறையும் முன்னரும் தொழுதவர் (பஜ்ர், அஸர்) நரகம் செல்ல மாட்டார்” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: உமாரா பின் ருவய்பா (ரலி), (முஸ்லிம்-634)

**ஈ. அல்லாவின் பொறுப்பில் (பாதுகாப்பில்) இருத்தல்**

“யார் சுபுஹ் தொழுது விட்டாரோ அவர் அல்லாஹ்வின் பொறுப்பில் இருக்கிறார். எனவே அல்லாஹ் தன் பொறுப்பிலுள்ளது பற்றி உங்களிடம் விசாரிக்குமாறு நடக்காதீர்கள். தனது பொறுப்பிலுள்ளது பற்றி யாரிடமாவது அவன் விசாரித்து அவரிடம் குறை கண்டால் அதற்காக அவன் அவரை முகங்குப்புற நரகில் தள்ளிவிடுவான்” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: ஜ□ன்துபு இப்னு அப்தில்லாஹ் (ரலி),
நூல்: முஸ்லிம் (657)

**உ. அல்லாஹ்வைப் பார்த்தல்**

ஒரு பௌர்ணமி அன்று நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் அமர்ந்திருந்தோம். அப்போது அவர்கள் நிலவை நோக்கி, “இந்த நிலவை நீங்கள் காண்பதுபோல நிச்சயம் உங்கள் இறைவனை நீங்கள் காண்பீர்கள்! அவனைக் காண்பதில் நெருக்கடிக்குள்ளாக மாட்டீர்கள். சூரியன் உதிக்கும் முன்னரும் சூரியன் மறையும் முன்னரும் தொழும் விஷயத்தில் (தூக்கம் போன்றவற்றால்) நீங்கள் மிகைக்கப்படாதிருக்க இயலு மானால் அதைச் செய்யுங்கள்” என்று கூறினார்கள்.

அறிவிப்பவர்: ஜரீர் பின் அப்துல்லாஹ் (ரலி),

நூல்: புகாரி (7434), முஸ்லிம் (633)

**எ. இஷாத் தொழுவது பாதி இரவு தொழுதது போன்றது, சுப்ஹு தொழுவது முழு இரவும் தொழுதது போன்றது**

“இஷாவை ஜமாஅத்துடன் தொழுதவர் பாதி இரவு தொழுதவர்போலாவார். சுப்ஹை ஜமாஅத்துடன் தொழுதவர் முழு இரவும் தொழுதவர்போலாவார் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: உஸ்மான் (ரலி), நூல்: முஸ்லிம் (656)

**2. ஜமாஅத்துடன் தொழுகையை நிறைவேற்றுதல்**

ஜமாஅத்துடன் தொழுவதற்கு மிகப் பெரிய நன்மை உண்டு. இது நபி (ஸல்) அவர்கள் மூலம் நிரூபணமாகி யுள்ளது. இதோ இந்த ஹதீஸை சிந்தித்துப் பாருங்கள்.

“தனியாகத் தொழுவதை விட ஜமாஅத்தாகத் தொழுவது இருபத்தேழு மடங்கு சிறந்தது” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: இப்னுஉமர் (ரலி), புகாரி-645 , முஸ்லிம்-650

எவ்வாறெனில் ஒரு நன்மைக்கு அதுபோன்று பத்து மடங்கு கூலி. அந்த வகையில் ஜமாஅத்துடன் தொழுகையை நிறைவேற்றுவதற்குரிய நன்மைகள் $10\times27=270$ ஆகும்.

**3. பணிவை மேற்கொள்ளல்**

தொழுகையின் உயிரோட்டமே பணிவுதான். தொழுகையில் கிடைக்கும் கூலியின் அளவு இந்தப் பணிவைப் பொருத்தே அமைந்திருக்கிறது. இதோ பணிவை மேற்கொள்வதால் ஏற்படும் பலன்கள் வருமாறு:

**அ. வெற்றி அடைதல்! அதாவது ஃபிர்தவ்ஸ் எனும் சொர்க்கத்தைப் பெறுதலும் நரகத்திலிருந்து ஈடேற்றம் அடைதலும்**

“நம்பிக்கை கொண்டோர் வெற்றி பெற்று விட்டனர். அவர்கள் தமது தொழுகையில் பணிவைப் பேணுவார்கள். வீணானதைப் புறக்கணிப்பார்கள். ஸகாத்தையும் நிறை வேற்றுவார்கள். தம் மனைவியர் அல்லது தமது அடிமைப் பெண்களிடம் தவிர தமது வெட்கத்தலங்களைக் காத்துக் கொள்வார்கள். அவர்கள் பழிக்கப்பட்டோர் அல்லர். இதற்கு அப்பால் (வேறு வழியைத்) தேடியவர்களே வரம்பு மீறியவர்கள். தமது அமானிதங்களையும் தமது உடன்படிக்கையையும் அவர்கள் பேணுவார்கள். மேலும் அவர்கள் தமது தொழுகை களைப் பேணிக்கொள்வார்கள். பிர்தவ்ஸ் எனும் சொர்க் கத்திற்கு அவர்களே உரிமையாளர்கள். அதில் அவர்கள் நிரந்தரமாக இருப்பார்கள்.” (23:1-11)

**ஆ. இறை நேசம்**

“அவர்கள் ஆர்வத்துடனும் அச்சத்துடனும் நம்மிடம் பிரார்த்திப்போராகவும் இருந்தனர். நமக்குப் பணிவோராகவும் இருந்தனர்.” (21:90)

பணிவு எனும் இப்பண்பு நம்பிக்கை கொண்ட அல்லாஹ் வின் அடியார்களுக்கு புகழப்படத்தக்க பண்பாகும். பணிவை மேற்கொள்பவர்களை அல்லாஹ் நேசிக்கிறான் என்பதை இது உணர்த்துகிறது.

**இ. மறுமையில் தனது நிழலில் அல்லாஹ் நிழல் கொடுத்தல்**

அல்லாஹ்வின் நிழலைத் தவிர வேறு நிழல் இல்லாத (மறுமை) நாளில் ஏழு பேர்களுக்கு அல்லாஹ் தன்னுடைய நிழலில் நிழல் கொடுப்பான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அந்த ஏழு பேர்களில் ஒருவரைப் பற்றிக் கூறும் போது 'தனிமையில் அல்லாஹ்வை நினைவு கூர்ந்து கண்ணீர் சிந்தும் ஒரு மனிதர்' என்று கூறினார்கள்.

நூல்: புகாரி (660), முஸ்லிம் (1031)

இந்த ஹதீஸ் எவ்வாறு ஆதாரமாக அமைகிறது எனில் தொழுகையில் பணிவை மேற் கொள்பவர் மற்ற நேரத்தை விட அதிகமாக தனிமையில் அழுகை அவரை மிகைக்கிறது. இதனால் மறுமை நாளில் அல்லாஹ் தன்னுடைய நிழலில் நிழல் கொடுக்கும் எழுவரில் ஒருவராக அவர் ஆகிறார்.

**ஈ. பணிவு தொழுகையின் கூலியை அதிகரிக்கச் செய்கிறது.**

"ஒரு அடியான் ஒரு தொழுகையைத் தொழுகிறான் எனில் அதற்காக அவனுக்கு பத்தில் ஒரு பங்கு கூலி அல்லது ஒன்பதில் ஒரு பங்கு அல்லது எட்டில் ஒரு பங்கு அல்லது ஏழில் ஒரு பங்கு அல்லது ஆறில் ஒரு பங்கு அல்லது ஐந்தில் ஒரு பங்கு அல்லது நான்கில் ஒரு பங்கு அல்லது மூன்றில் ஒரு பங்கு அல்லது இரண்டில் ஒரு பங்கு கூலி தான் எழுதப்படுகிறது" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அம்மார் பின் யாஸிர் (ரலி), அஹ்மத் (18136)

**உ. பாவன்னிப்பும் மகத்தான கூலியும்**

அல்லாஹ் கூறுகிறான்: "முஸ்லிமான ஆண்களும் பெண் களும், நம்பிக்கை கொண்ட ஆண்களும் பெண்களும், கட்டுப் பட்டு நடக்கும் ஆண்களும் பெண்களும், உண்மை பேசும்

ஆண்களும் பெண்களும், பொறுமையை மேற்கொள்ளும் ஆண்களும் பெண்களும், **பணிவை மேற்கொள்ளும் ஆண் களும் பெண்களும்,** தர்மம் செய்யும் ஆண்களும் பெண்களும், நோன்பு நோற்கும் ஆண்களும் பெண்களும், தமது கற்பைக் காத்துக் கொள்ளும் ஆண்களும் பெண்களும், அல்லாஹ்வை அதிகம் நினைக்கும் ஆண்களும் பெண்களும் ஆகிய அவர் களுக்கு அல்லாஹ் மன்னிப்பையும் மகத்தான கூலியையும் தயார் செய்து உள்ளான்." (33:35)

## 4. தொழுகையின் தொடக்கத்திற்கான திக்ரை ஓதுதல்: (வானத்தின் வாயில்கள் திறக்கப்படுதல்)

தொழுகையின் தொடக்கத்திற்கான திக்ருகள் அதிகம் உள்ளன. அவற்றில் ஒன்று "அல்லாஹு அக்பர் கபீரா வல்ஹம்து லில்லாஹி கஸீரா வசுப்ஹானல்லாஹி புக்ரதன் வஅஸீலா". இதனுடைய மிகப் பெறும் சிறப்பை கருத்தில் கொண்டு ஒரு உதாரணத்திற்கு இதை நாம் இங்கு குறிப்பிடு கிறோம். இதனுடைய சிறப்பு என்ன என்பது உங்களுக்குத் தெரியுமா? இதற்காக வானத்தின் வாயில்கள் திறக்கப் படுகின்றன!

இப்னு உமர் (ரலி) அறிவிப்பதாவது: நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் தொழுது கொண்டிருந்தோம். அப்போது கூட்டத்திலிருந்து ஒரு மனிதர், 'அல்லாஹு அக்பர் கபீரா வல்ஹம்து லில்லாஹி கஸீரா வசுப்ஹானல்லாஹி புக்ரதன் வஅஸீலா' என்று கூறினார். "இன்னின்ன வார்த்தைகளைக் கூறியது யார்?" என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். கூட்டத்திலிருந்து ஒரு மனிதர், 'அல்லாஹ்வின் தூதர்

அவர்களே நான் தான்!' என்றார். "அதற்காக வானத்தின் கதவுகள் திறக்கப்படுவது குறித்து ஆச்சரியப்படுகிறேன்" என்று நபி (ஸல்) கூறினார்கள். 'நபி(ஸல்) அவர்கள் இதைக் கூறக் கேட்டதிலிருந்து நான் இந்த வார்த்தைகளை விட்டதில்லை'. (முஸ்லிம்-601)

اَللهُ أَكْبَرُ كَبِيْرًا والْحَمْدُ للهِ كَثِيْرًا وَسُبْحَانَ اللهِ بُكْرَةً وَأَصِيْلاً

(பொருள்: எல்லாவற்றையும் விட அல்லாஹ் பெரியவன்! மிகப் பெரியவன்! எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே என அதிகம் புகழ்கிறேன். காலையிலும் மாலையிலும் அல்லாஹ்வைத் தூயவன் என துதிக்கிறேன்.)

**5. ஸ□ரத்துல் ஃபாத்திஹாவை ஓதுதல்**

இதன் சிறப்புகள் வருமாறு:

**அ. திருக்குர்ஆனிலுள்ள மகத்தான அத்தியாயம்**

ஸ□ரத்துல் ஃபாத்திஹாவை நீங்கள் ஓதினால் திருக்குர் ஆனில் மகத்தான ஸ□ராவை நீங்கள் ஓதியவர்களாக ஆகிவிடுவீர்கள் என்பது உங்களுக்குத் தெரியுமா?

இதோ இந்த நபிமொழியை சிந்தித்துப் பாருங்கள்!

அபூஸயீத் பின் முஅல்லா (ரலி) அறிவிக்கிறார்கள்: நான் பள்ளிவாசலில் தொழுது கொண்டிருக்கும்போது நபி(ஸல்) அவர்கள் என்னை அழைத்தார்கள். நான் அவர்களுக்கு பதில் கூறவில்லை. (தொழுது முடித்த) பிறகு அவர்களிடம் சென்று, 'அல்லாஹ்வின் தூதரே! நான் தொழுது கொண் டிருந்தேன்! (அதனால் பதிலளிக்க முடியவில்லை)' என்றேன். அதற்கு நபி(ஸல்)அவர்கள், "அல்லாஹ்வுக்கும், உங்களுக்கு

வாழ்வளிக்கும் காரியத்திற்கு இத்தூதர் உங்களை அழைக்கும்போது அவருக்கும் பதிலளியுங்கள் (8:24) என்று அல்லாஹ் கூற வில்லையா?" என்று கேட்டுவிட்டு "இந்தப் பள்ளியிலிருந்து நீ புறப்படுவதற்கு முன் திருக்குர்ஆனில் உள்ள மகத்தான ஒரு அத்தியாயத்தை உனக்கு நான் கற்றுத் தருகிறேன்" என்று கூறி எனது கையைப் பிடித்துக் கொண்டார்கள். நாங்கள் பள்ளியிலிருந்து வெளியேற நாடிய போது, 'அல்லாஹ்வின் தூதரே! குர்ஆனிலுள்ள மகத்தான தொரு அத்தியாயத்தைக் கற்றுத் தருவதாகக் கூறினீர்களே!' என்றேன். "அது திரும்பத் திரும்ப ஓதப்படக்கூடிய ஏழு வசனங்கள் ஆகும். எனக்கு வழங்கப்பட்ட மகத்தான குர்ஆனாகும்" என நபி(ஸல்) கூறினார்கள். (புகாரி-4474)

**ஆ. புகழாரம் சூடுதலும் பிரார்த்தனையும்**

எவ்வாறெனில் ஸ□ரத்துல் ஃபாத்திஹாவை ஓதுவது அல்லாஹ்வுக்கும் அடியானுக்கும் இடையில் இரு பகுதியாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அதில் முதல் பகுதி அல்லாஹ்வின் மீது புகழாரம் சூடுவதாகவும் அவனது மகத்துவதை பறைசாற்று வதாகவும் அமைந்திருக்கிறது. அதில் மறுபகுதி அடியான் அல்லாஹ்விடம் பிரார்த்திப்பதாகவும் வேண்டுவதாகவும் அமைந்திருக்கிறது.

அல்லாஹ் கூறுவதாக நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: "தொழுகையை எனக்கும் என் அடியானுக்குமிடையில் இரு பங்காகப் பங்கிட்டுள்ளேன். என் அடியான் கேட்டவை அவனுக்கு உண்டு. 'அல்ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன்' (அகில உலகங்களையும் படைத்து பரிபாலிக்கும் அல்லாஹ்

வுக்கே எல்லாப் புகழும்!) என்று அடியான் கூறும்போது "என் அடியான் என்னைப் புகழ்ந்து விட்டான்" என்று அல்லாஹ் கூறுகிறான்.

அவன் 'அர்ரஹ்மானிர்ரஹீம்' (அவன் அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன்) என்று கூறும்போது "என் அடியான் என் மீது புகழாரம் சூட்டிவிட்டான்" என்று அல்லாஹ் கூறுகிறான். அவன் 'மாலிகி யவ்மித்தீன்' (நியாயத் தீர்ப்பு நாளின் அதிபதி) என்று கூறும்போது "என் அடியான் என்னை கௌரவப்படுத்தி விட்டான்" என்று அல்லாஹ் கூறுகிறான். 'இய்யாக்க நஃபுது வஇய்யாக்க நஸ்தயீன்' (உன்னையே வணங்குகிறோம். உன்னிடத்திலேயே உதவியும் தேடுகிறோம்) என்று கூறும்போது "இது தான் எனக்கும் என் அடியானுக்குமிடையே உள்ளதாகும். என் அடியான் கேட்டவை அவனுக்குண்டு" என்று அல்லாஹ் கூறுகிறான்.

'இஹ்தினஸ் ஸிராத்தல் முஸ்தகீம், ஸிராத்தல்லதீன அன்அம்த அலைஹிம், கைரில் மஃக்ழூபி அலைஹிம் வலழ்ழால்லீன்' (எங்களுக்கு நேர்வழி காட்டுவாயாக! அது நீ யாருக்கு அருள் புரிந்தாயோ அவர்கள் வழி! வழிகெட்டவர்கள் மற்றும் (உன்னால்) கோபிக்கப்பட்டவர்களின் வழியல்ல!) என்று கூறும்போது "இது என் அடியானுக்குரியது. என் அடியான் கேட்டது அவனுக்கு உண்டு" என்று அல்லாஹ் கூறுகிறான்.

அறிவிப்பவர்: அபூஹ□ரைரா (ரலி), நூல்: முஸ்லிம் (395)

**6. ஆமீன் கூறுதல்**

இதோ சந்தோஷப்படுங்கள் தொழுகையாளிகளே! எவர் கூறும் ஆமீன் வானவர்கள் கூறும் ஆமினுக்கு ஒத்து அமைந்து விடுகின்றதோ அவரது முன் பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன.

இமாம் 'கைரில் மஃக்ழூபி அலைஹிம் வலழ்ழால்லீன்' என்று கூறும்போது நீங்கள் ஆமீன் கூறுங்கள்! ஏனெனில் எவர் கூறும் ஆமீன் வானவர்கள் கூறும் ஆமினுக்கு ஒத்து அமைந்துவிடுகின்றதோ அவரது முன் பாவங்கள் மன்னிக்ப் படுகின்றன என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹு□ரைரா (ரலி), நூல்: புகாரி (782)

முஸ்லிமுடைய ஒரு அறிவிப்பில் உள்ளது: "உங்களில் ஒருவர் (தொழுகையில்) ஆமீன் கூறும்போது வானத்திலுள்ள வானவர்களும் ஆமீன் கூறினால் இரண்டும் ஒன்றுக் கொன்று ஒத்து அமைந்துவிட்டால் அவரது முன் பாவங்கள் மன்னிக் கப்பட்டுவிடும்" (முஸ்லிம்-410)

**7. ருகூஃ செய்தல்**

பாவங்கள் உதிர்ந்துவிடுவது இதன் பலன்களில் உள்ள தாகும். "ஒரு அடியான் தொழுகைக்காக நிற்கும்போது அவனது பாவங்கள் அனைத்தும் கொண்டுவரப்பட்டு அவனு டைய தலையிலும் தோள்களிலும் வைக்கப்படும். அவன் ருகூஃ, ஸ□ஜ□த் செய்யும் போதெல்லாம் அந்தப் பாவங்கள் அவனை விட்டும் உதிர்ந்துவிடுகின்றன" என நபி (ஸல்) கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹு□ரைரா (ரலி),

நூல்: பைஹகீ-குப்ரா (3/10), ஸஹீஹு□ல் ஜாமிஃ

**8. ருகூவிலிருந்து எழுந்ததும் திக்ரு செய்தல்**

ருகூவிலிருந்து எழுந்த பிறகு கூறக்கூடிய திக்ருக்கு மிகப் பெரும் சிறப்பும் மகத்தான கூலியும் இருக்கிறது.

**அ. ‘அல்லாஹும்ம ரப்பனா லகல் ஹம்து’ அல்லது ‘ரப்பனா வலகல் ஹம்து’ என்று ஒருவர் கூறுவது வானவர்களின் கூற்றுக்கு ஒத்து அமைந்து விடுமானால் அவரது முன் பாவங்கள் மன்னிக்கப்படும்.**

“இமாம் **‘ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதா’** என்று கூறும் போது நீங்கள் **அல்லாஹும்ம ரப்பனா லகல் ஹம்து** என்று கூறுங்கள்! ஏனெனில் யாருடைய இந்தக் கூற்று வானவர் களின் கூற்றுடன் ஒத்து அமைந்துவிடுகின்றதோ அவருடைய முன் பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி), புகாரி-796, முஸ்லிம்-409

(**ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதா:** தன்னைப் புகழ்வதை அல்லாஹ் கேட்டுக் கொண்டான். **அல்லா ஹும்ம ரப்பனா லகல் ஹம்து:** இறைவா! எங்கள் இரட்சகனே! உனக்கே எல்லாப் புகழும். **ரப்பனா வலகல் ஹம்து:** எங்கள் இரட்சகனே! உனக்கே எல்லாப் புகழும்.)

திர்மிதி (276), நஸயீ (1053) உடைய அறிவிப்பில், “இமாம் **‘ஸமி அல்லாஹு லிமன் ஹமிதா’** என்று கூறும்போது நீங்கள் **‘ரப்பனா வலகல் ஹம்து’** என்று கூறுங்கள்! ஏனெனில் யாருடைய இந்தக் கூற்று வானவர்களின் கூற்றுடன் ஒத்து அமைந்துவிடுகின்றதோ அவரது முன் பாவங்கள் மன்னிக்கப் படுகின்றன” என்று வந்துள்ளது.

**ஆ. 'ரப்பனா வலகல் ஹம்து ஹம்தன் கஸீரன் தய்யிபன் முபாரகன் ஃபீஹ்' என்னு யார் கூறினாரோ அதை எழுது வதற்காக வானவர்கள் விரைதல்**

நாங்கள் நபி (ஸல்) அவர்களின் பின்னால் (ஒரு நாள்) தொழுது கொண்டிருந்தோம். அவர்கள் ருகூவிலிருந்து தலையை உயர்த்தியபோது **'ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதா'** என்று கூறினார்கள். அவர்களுக்குப் பின்னால் இருந்த ஒரு மனிதர் **'ரப்பனா வலகல் ஹம்து ஹம்தன் கஸீரன் தய்யிபன் முபாரகன் ஃபீஹ்'** என்று கூறினார். தொழுது முடித்ததும் **"**இந்த வார்த்தைகளைக் கூறியவர் யார்?**"** என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அந்த மனிதர் 'நான்' என்றார். **"**முப்பதுக்கும் மேற்பட்ட மலக்குகள் யார் இதைப் பதிவு செய்வது? என்று போட்டி போட்டதை நான் கண்டேன்**"** என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: ரிஃபாஆ பின் ராஃபிஃ (ரலி), நூல்: புகாரி (799)

رَبَّنَا وَلَكَ الْحَمْدُ حَمْدًا كَثِيْرًا طَيِّبًا مُبَارَكاً فِيْهِ

(பொருள்: எங்கள் இரட்சகனே! மேலும் புகழ் அனைத்தும் உனக்கே! அருட்பேரும் அழகும் மிக்க அதிகமான புகழ்!)

**9. ஸஜ்தா செய்தல்**

தொழுகையின் அம்சங்களில் மிக முக்கியமானது ஸஜ்தா வாகும். ஏனெனில் அல்லாஹ்வுக்குப் பணிவதில் உள்ள பூரணத்துவம் இதில் தான் இருக்கிறது. இதனால் தான் இந்த ஸஜ்தாவுக்கு நன்மைகளும் நற்கூலிகளும் அதிகம்

வந்துள்ளன. இதோ இந்த மகத்தான நன்மையை என்னுடன் சேர்ந்து நீங்களும் சிந்தியுங்களேன்!

**அ. வெற்றி அடைதல்! அதாவது சொர்க்கத்தைப் பெறுதலும் நரகத்திலிருந்து ஈடேற்றம் அடைதலும்**

அல்லாஹ் கூறுகிறான்: "நம்பிக்கை கொண்டோரே! ருகூஃ செய்யுங்கள்! ஸஜ்தா செய்யுங்கள்! உங்கள் இறைவனை வணங்குங்கள்! நன்மையைச் செய்யுங்கள்! நீங்கள் வெற்றி பெறலாம்." (22:77)

'நீங்கள் வெற்றி பெறலாம்' என்பதற்கு ஷைக் அபூபக்கர் அல்ஜஸாயிரி அவர்கள் தமது விரிவுரையில் "அதாவது அதன் மூலம் நீங்கள் வெற்றிக்குரியவராக ஆவீர்கள். அந்த வெற்றி சொர்க்கத்தைப் பெறுதலும் நரகிலிருந்து ஈடேற்றம் அடைவது மாகும்" என்று குறிப்பிட்டுள்ளார்கள்.

**ஆ. மறுமை நாளில் அல்லாஹ்வின் அருளும் திருப் பொருத்தமும் பிரகாசமும்**

அல்லாஹ் கூறுகிறான்: "முஹம்மத் அல்லாஹ்வின் தூதராவார். அவருடன் இருப்போர் நிராகரிப்பாளர்கள் மீது கடுமையாகவும் தமக்கிடையே இரக்கம் மிகுந்தும் இருக்கின்றனர். ருகூஃ, ஸஜ்தா செய்வோராக அவர்களை காண்பீர். அல்லாஹ்விடமிருந்து அருளையும் பொருத்தத் தையும் தேடுவார்கள். அவர்களின் அடையாளம் ஸஜ்தாவின் தழும்பாக அவர்களின் முகத்தில் இருக்கும்." (48:29)

'அவர்களின் அடையாளம் ஸஜ்தாவின் தழும்பாக அவர்களின் முகத்தில் இருக்கும்' என்பதற்கு இமாம் அப்துர் ரஹ்மான் ஸஃதீ அவர்கள் தமது விரிவுரையில் "அதாவது

அவர்கள் அதிகமாகவும் அழகாகவும் தொழுததனால் அவர்களின் முகம் பிரகாசிக்கின்ற அளவுக்கு அதன் தாக்கம் அவர்களின் முகத்தில் ஏற்பட்டுள்ளது. அவர்களின் அந்தரங்கம் தொழுகையால் பிரகாசித்ததுபோல அவர்களின் வெளிரங்கம் கண்ணியத்தால் பிரகாசித்தது" என்று குறிப்பிட்டுள்ளார்கள்.

**இ. அந்தஸ்து உயர்த்தப்படுதல், பாவம் அழிக்கப்படுதல்**

"அதிகம் ஸஜ்தா செய்வதைக் கடைபிடி. ஏனெனில் நீ அல்லாஹ்வுக்காக ஒரு முறை ஸஜ்தா செய்தால் அதற்குப் பகரமாக அல்லாஹ் ஒரு அந்தஸ்தை உனக்கு உயர்த்துகிறான். ஒரு பாவத்தை உன்னை விட்டும் அழித்துவிடுகிறான்" என நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: ஸவ்பான்(ரலி), நூல்: முஸ்லிம்(488)

**ஈ. சொர்க்கத்தில் நபி(ஸல்)அவர்களுடன் இருத்தல்**

நான் நபி(ஸல்)அவர்களுடன் இரவு தங்கி அவர்களுக்கு உளூச் செய்வதற்குரிய தண்ணீரைக் கொடுத்து அவர்களுடைய தேவைகளையும் பூர்த்தி செய்து வந்தேன். (ஒரு நாள்) "என்னிடம் (ஏதாவது) கேள்" என்று கூறினார்கள். 'சொர்க்கத்தில் நான் உங்களுடன் இருக்க வேண்டும் என்பதே என் வேண்டுதல்' என்றேன். "வேறு ஏதேனும் உண்டா?" என்று கேட்டார்கள். நான் 'இதுதான் எனது வேண்டுதல்' என்றேன். உடனே நபி (ஸல்) அவர்கள் "உனக்காக நீ அதிகமதிகம் ஸஜ்தா செய்யது எனக்கு உதவு" என்று கூறினார்கள்.

அறிவிப்பவர்: ரபீஆ பின் கஅப்(ரலி), முஸ்லிம்(489)

**உ. பிரார்த்தனை அங்கீகரிக்கப்படுவதற்குரிய இடம்**

“ஒரு அடியான் தன் இறைவனுக்கு மிக நெருக்கமாக இருப்பது ஸஜ்தாவின்போதுதான். எனவே அதில் அதிகம் துஆ செய்யுங்கள்” என்று நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹ□ரைரா (ரலி), முஸ்லிம் (482)

“...ஸஜ்தாவில் அதிகம் துஆ செய்வதற்கு முயற்சியுங்கள். அந்த துஆ ஏற்கப்படுவதற்குத் தகுதியானது!” என்றும் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரலி), நூல்: முஸ்லிம் (479)

**ஊ. பாவங்கள் உதிர்தல்**

“ஒரு அடியான் தொழுகைக்காக நிற்கும்போது அவனது பாவங்கள் அனைத்தும் கொண்டு வரப்பட்டு அவனுடைய தலையிலும் தோள்களிலும் வைக்கப்படும். அவன் ருகூஃ, ஸ□ஜ□த் செய்யும்போதெல்லாம் அவனை விட்டும் அந்தப் பாவங்கள் உதிர்ந்து விடுகின்றன” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹ□ரைரா (ரலி),

நூல்: பைஹகீ-குப்ரா (3/10), ஸஹீஹ□ல் ஜாமிஃ

**எ. ஸஜ்தாவின் உறுப்புகளை நரகம் தீண்டாது**

“...அல்லாஹ் நரகத்திற்கு ஸஜ்தாவின் உறுப்புகளை தீண்டுவதை தடைசெய்துள்ளான்” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரலி),

நூல்: புகாரி (806), முஸ்லிம் (182)

ஏனெனில் முஃமின்களை அல்லாஹ் மன்னிக்கவில்லை யெனில் அவர்களுடைய தீமைகளை விட நன்மைகளுக்கு முன்னுரிமை வழங்க நன்மைகள் அவர்களிடம் இல்லை யெனில் அவர்கள் செய்த பாவங்கள் அளவுக்கு அவர்கள் நரகத்தில் வேதனை செய்யப்படுவார்கள். ஆனால் ஸஜ்தா செய்த அவர்களுடைய உறுப்புக்கள் கண்ணியமானவை என்பதால் அவற்றை நரகம் தீண்டாது மட்டுமல்ல அவற்றில் எந்தப் பாதிப்பையும் ஏற்படுத்தாது. (அஷ்ஷரஹ் அல்மும்திஃ- இப்னு உஸைமீன்)

**10. முதல் அத்தஹிய்யாத்து ஓதுதல்**

**வானம், பூமியிலுள்ள அல்லாஹ்வின் அடியார்களின் எண்ணிக்கைக்கு நிகரான நன்மை:**

“...உங்களில் ஒருவர் தொழும்போது **அத்தஹிய்யாத்து லில்லாஹி வஸ்ஸலவாத்து வத்தய்யிபாத்து அஸ்ஸலாமு அலைக்க அய்யுஹன் நபிய்யு வரஹ்மதுல்லாஹி வபரகாத் துஹ அஸ்ஸலாமு அலைனா வஅலா இபாதில்லாஹிஸ் ஸாலிஹீன்** என்று கூறட்டும். இதை நீங்கள் கூறினால் வானம் பூமியிலுள்ள அனைத்து நல்லடியார்களுக்கும் ஸலாம் கூறியதாக அமையும். **அஷ்ஹது அல்லாயிலாஹ இல்லல் லாஹ வஅஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹ வரஸ லுஹ** என்றும் கூறட்டும்” என நபி (ஸல்) கூறினார்கள்.

அறிவிப்பவர்: இப்னு மஸ்வூத்(ரலி), நூல்: புகாரி(831)

اَلتَّحِيَّاتُ للهِ وَالصَّلَوَاتُ وَالطَّيِّبَاتُ اَلسَّلاَمُ عَلَيْكَ أَيُّهَا النَّبِيُّ وَرَحْمَةُ اللهِ وَبَرَكَاتُهُ اَلسَّلاَمُ عَلَيْنَا وَعَلَى عِبَادِ اللهِ الصَّالِحِيْنَ أَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللهُ وَأَشْهَدُ أَنَّ مُحَمَّداً عَبْدُهُ وَرَسُوْلُهُ

(பொருள்: காணிக்கைகளும் தொழுகைகளும் ஏனைய நல்லறங்களும் அல்லாஹ்வுக்கே உரியன. நபியே! உங்கள் மீது ஸலாமும் இறைவனது அருளும் பரகத்தும் ஏற்படட்டுமாக. எங்கள் மீதும் நல்லடியார்கள் அனைவர் மீதும் ஸலாம் உண்டாகட்டுமாக. வணக்கத் திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என நான் உறுதியாக நம்புகிறேன். மேலும் முஹம்மது நபி அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும் தூதரும் ஆவார்கள் எனவும் நான் உறுதியாக நம்புகிறேன்.)

இங்கு குறைகளை விட்டும் அனைத்து ஆபத்துகளை விட்டும் (ஸலாமத்) பாதுகாப்பை வேண்டி பிரார்த்தித்திருப்பது நமக்கும் வானம் பூமியிலுள்ள மனிதர்கள், ஜின்கள், மற்றும் வானவர்களில் உயிருடன் உள்ள அல்லது இறந்துபோன நல்லடியார்கள் அனைவருக்கும் ஆகும். உங்கள் மீது அல்லாஹ் அருளிய அருட்கொடையைப் பாருங்கள்! அல்லாஹ் வின் அனைத்து நல்லடியார்களுக்கும் நீங்க்ள ஸலாம்கூறிய நன்மையை அல்லாஹ் உங்களுக்கு வழங்குகிறான்.

**11. கடைசி அத்தஹிய்யாத்து (ஸலவாத்து) ஓலுதல்**

முஹம்மது நபி(ஸல்) அவர்கள் மீது ஸலவாத்துச் சொல் வதற்கு ஏராளமான நற்கூலிகளும் பன்மடங்கு நன்மைகளும் உள்ளன. அவற்றிலிருந்து:

**அ. அல்லாஹ்வையும் மலக்குகளையும் பின்பற்றுதல்**

அல்லாஹ் கூறுகிறான்: "அல்லாஹ் இந்த நபிக்கு அருள் புரிகிறான். வானவர்களும் அவர் மீது ஸலவாத்துச் சொல் கின்றனர். நம்பிக்கை கொண்டோரே! நீங்களும் அவர் மீது ஸலவாத்துச் சொல்லுங்கள். ஸலாமும் கூறுங்கள்." (33:56)

(ஸலவாத்துச் சொல்லுதல் என்றால் அருளை வேண்டிப் பிரார்த்தித்தல் என்று பொருள்.)

**ஆ. பத்து மடங்குகள் வரை கூலி வழங்கப்படுதல்**

"யார் என் மீது ஒரு தடவை ஸலவாத்துச் சொல்கிறாரோ அவருக்கு அல்லாஹ் பத்து முறை அருள் புரிகிறான்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

அறிவிப்பவர்: அபூஹு□ரைரா (ரலி), முஸ்லிம்-(408)

**இ. 10 நன்மைகள் எழுதப்பட்டு 10 தீமைகள் அழிக்கப்படுதல்**

"என் மீது ஒரே ஒரு முறை யார் ஸலவாத்துச் சொல் கிறாரோ அதற்குப் பகரமாக அல்லாஹ் பத்து நன்மைகளை அவருக்கு எழுதுகிறான்" என்று நபி (ஸல்) கூறினார்கள். மற்றொரு அறிவிப்பில் "பத்து பாவங்களை அழிக்கிறான்" என்றும் கூறப்பட்டுள்ளது. (அஹ்மத்-7245, 15759, 11560)

**12. ஸலாம் கொடுப்பதற்கு முன் துஆ செய்தல்**

ஸலாம் கொடுப்பதற்கு முன் துஆ செய்வது துஆ ஏற்கப்படுவதற்குரிய இடமாகும் என்பதைத் தவிர இதற்கு வேறு சிறப்பு இல்லையென்றாலும் அதுவே நமக்குப் போது மானது. ஏனெனில் தொழுகையாளி தன் இறைவனுடன்

ஒன்றி உரையாடுகிறார். அவர் தொழுகையிலேயே இருப்ப தனால் அவரது துஆ அங்கீகரிக்கப்படுவதற்கு ஏற்றதாகும்.

"உங்கள் ஒருவர் தொழுகையில் அமர்ந்தால் அத்தஹிய் யாத் ஓதி பிறகு தான் விரும்பியதை எல்லாம் கேட்கட்டும்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அலீ (ரலி), நூல்: புகாரி (835), முஸ்லிம் (402)

'எந்தத் துஆ ஏற்கப்படுவதற்கு நெருக்கமானது?' என அபூஉமாமா (ரலி) நபி (ஸல்) அவர்களிடம் கேட்டார்கள். அதற்கு நபியவர்கள், "இரவின் பிந்திய பகுதியிலும் கடமையான தொழுகைகளின் இறுதியிலும் கேட்கப்படும் துஆ" என விடை அளித்தார்கள்.

அறிவிப்பவர்: அபூ உமாமா (ரலி), நூல்: திர்மிதி (3499)

இந்த ஹதீஸில் 'கடமையான தொழுகைகளின் இறுதியில்' என்பதற்கு 'துப்ரஸ் ஸலவாத்' என்ற வார்த்தை பயன்படுத் தப்பட்டுள்ளது. இந்த வார்த்தைக்கு 'கடமையான தொழு கைகளுக்குப் பிறகு' என்ற பொருளும் உண்டு. ஆனால் பெரும்பாலும் இந்த வார்த்தை 'கடமையான தொழுகை களின் இறுதியில்' (ஸலாம் கொடுப்பதற்கு முன்) என்ற பொருளில் பயன்படுத்தப்படுகிறது.

## இரண்டாவது புதையலின் சுருக்கம்:

### 1. தொழுகைகளின் சிறப்பு

**நற்கூலிகள்:** அ. பதவிகளும் மன்னிப்பும் கண்ணியமான உணவும். ஆ. பாவங்களுக்குப் பரிகாரம் அல்லது பாவங்கள் மன்னிக்கப்படுதல். இ. அருள்பாலிக்கப்படுதல் ஈ. ஃபிர்தவ்ஸ்

எனும் சொர்க்கம் செல்லுதல். உ. ஒளி. ஊ. பஜர், அஸர் தொழுகைகளில் இரவு நேரத்து வானவர்களும் பகல் நேரத்து வானவர்களும் கலந்துகொள்ளுதல். எ. சொர்க்கம் செல்லுதல் (பஜர்,அஸர்) ஏ. நரகம் செல்லாதிருத்தல் (பஜர், அஸர்). ஐ. அல்லாவின் பொறுப்பில் (பாதுகாப்பில்) இருத்தல் (பஜர்). ஒ. அல்லாஹ்வைப் பார்த்தல் (பஜர்,அஸர்). ஓ. பாதி இரவு தொழுத நன்மை(இஷா), முழு இரவும் தொழுத நன்மை (சுப்ஹ□).

**2. ஜமாஅத்துடன் தொழுதல்**

**நற்கூலிகள்:** 10 × 27 = 270 நன்மைகள்

**3. தொழுகையில் பணிவை மேற்கொள்ளுதல்**

**நற்கூலிகள்:** அ. வெற்றி அடைதல்! அதாவது ஃபிர்தவ்ஸ் எனும் சுவர்க்கத்தைப் பெற்று நரகிலிருந்து ஈடேற்றமடைதல் ஆ. இறைநேசம். இ. மறுமையில் தனது நிழலில் அல்லாஹ் நிழல் கொடுத்தல். ஈ. தொழுகையின் கூலியை அதிகரிக்கச் செய்தல். உ. பாவன்னிப்பும் மகத்தான கூலியும்

**4. தொழுகையில் ஆரம்ப துஆவை ஓதுதல்**

**நற்கூலி:** வானத்தின் வாசல்கள் திறக்கப்படுதல்.

**5. ஸ□ரத்துல் ஃபாத்திஹாவை ஓதுதல்**

**நற்கூலிகள்:** அ. திருக்குர்ஆனிலுள்ள மகத்தான அத்தியாயத்தை ஓதுதல். ஆ. இது அல்லாஹ்வுக்கும் அடியானுக்கும் இடையில் இரு பகுதியாகப் பிரிக்கப்பட்டுள்ளது. (புகழாரமும் பிரார்த்தனையும்)

**6. ஆமீன் கூறுதல்**

**நற்கூலி:** பாவங்கள் மன்னிக்கப்படுதல்.

**7. ருகூஃ செய்தல்**

**நற்கூலி:** பாவங்கள் உதிர்ந்து விடுதல்.

**8. ருகூவிலிருந்து எழுந்ததும் திக்ரு செய்தல்**

**நற்கூலிகள்:** அ. பாவங்கள் மன்னிக்கப்படுதல். ஆ. அதை எழுதுவதற்காக வானவர்கள் விரைதல்.

**9. ஸஜ்தா செய்தல்**

**நற்கூலிகள்:** அ. வெற்றி அடைதல்! அதாவது சொர்க் கத்தைப் பெறுதலும் நரகத்திலிருந்து ஈடேற்றம் அடைதலும். ஆ. மறுமையில் அல்லாஹ்வின் அருளும் திருப்பொருத்தமும் பிரகாசமும். இ. அந்தஸ்து உயர்த்தப்படுதல், பாவம் அழிக்கப்படுதல் ஈ. சொர்க்கத்தில் நபி(ஸல்) அவர்களுடன் இருத்தல் உ. பிரார்த்தனை அங்கீகரிக்கப்படுவதற்கு உரிய இடம் ஊ. பாவங்கள் உதிர்தல் எ. ஸஜ்தாவின் உறுப்பு களை நரகம் தீண்டாது(முஃமின்களில் பாவிகளுக்கு).

**10. முதல் அத்தஹிய்யாத்து ஓதுதல்**

**நற்கூலி:** அனைத்து நல்லடியார்களுக்கும் ஸலாம் சொன்ன நன்மை.

**11. கடைசி அத்தஹிய்யாத்து ஓதுதலும் நபியின் மீது ஸலவாத்து சொல்லுதலும்**

**நற்கூலிகள்:** அ. அல்லாஹ்வையும் மலக்குகளையும் பின்பற்றுதல். ஆ. பத்து மடங்குகள் வரை கூலி வழங்கப் படுதல். இ. பத்து நன்மைகள் எழுதப்பட்டு பத்து தீமைகள் அழிக்கப்படுதல்.

**12. ஸலாம் கொடுப்பதற்கு முன் துஆ செய்தல்**

**நற்கூலி:** துஆ அங்கீகரிக்கப்படுவதற்குரிய இடம்.

## மூன்றாவது புதையல்

## தொழுகைக்குப் பிறகு செய்ய வேண்டிய திக்ருகளும் செயல்களும்

தொழுகைக்குப் பிறகு பல்வேறு திக்ருகள் உள்ளன. அவற்றுக்குப் பல்வேறு நன்மைகளும் சிறப்புகளும் உள்ளன. அவற்றிலிருந்து சில:

**அ. பாவங்கள் மன்னிக்கப்படுதல்**

சுப்ஹானல்லாஹ் 33 தடவை, அல்ஹம்து லில்லாஹ் 33 தடவை, அல்லாஹு□ அக்பர் 33 தடவை, லாஇலாஹ இல்லல்லாஹு□ வஹ்தஹு□ லாஷரீக்கலஹு□ லஹு□ல் முல்கு வலஹு□ல் ஹம்து வஹு□வ அலாகுல்லி ஷையின் கதீர் ஒரு தடவை ஓதுதல்

“ஒவ்வொரு தொழுகைக்குப் பிறகும் சுப்ஹானல்லாஹ் 33 தடவை, அல்ஹம்து லில்லாஹ் 33 தடவை, அல்லாஹு□ அக்பர் 33 தடவை, இவை 99 ஆகும். பிறகு நூறைப் பூர்த்தி செய்ய லாஇலாஹ இல்லல்லாஹு□ வஹ்தஹு□ லாஷரீக் கலஹு□ லஹு□ல் முல்கு வலஹு□ல் ஹம்து வஹு□வ அலாகுல்லி ஷையின் கதீர் என்று யார் கூறுகிறாரோ அவரது பாவங்கள் மன்னிக்கப்படும். அவை கடல் நுரை போன்று (அதிகம்) இருந்தாலும் சரியே” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹு□ரைரா (ரலி), நூல்: முஸ்லிம் (597)

**ஆ. அருட்பாக்கியங்கள், பதவிகள் மற்றும் சிறப்புகளைப் பெறுதலும், சொர்க்கம் செல்லுதலும், 1500 நன்மைகளும்**

சுப்ஹானல்லாஹ் 10 தடவை, அல்ஹம்து லில்லாஹ் 10 தடவை, அல்லாஹு அக்பர் 10 தடவை ஓதுதல்

'அல்லாஹ்வின் தூதரே! செல்வந்தர்கள் பதவிகளையும் நிலையான அருட்பாக்கியங்களையும் அள்ளிச் சென்று விட்டார்கள்!' என்று (நபியிடம் சில ஏழை) தோழர்கள் முறை யிட்டார்கள். "அது எப்படி?" என்று நபியவர்கள் வினவியதும், 'நாங்கள் தொழுவதுபோலவே அவர்களும் தொழுகிறார்கள். நாங்கள் அறப்போர் செய்வதுபோல அவர்களும் செய்கி றார்கள். தம் செல்வங்களிலிருந்து மேல்மிச்ச மானதை (நல்வழியில்) செலவு செய்கிறார்கள். ஆனால் எங்களுக்கு அந்தச் செல்வம் இல்லை' என்று அத்தோழர்கள் கூறினர்.

அதற்கு நபி(ஸல்)அவர்கள், "நான் உங்களுக்கு ஒரு காரியத்தைக் கற்றுத் தரட்டுமா? அதை நீங்கள் செய்து வந்தால் உங்களுக்கு முன் சென்றவர்களை நீங்கள் பிடித்து விடுவீர்கள். உங்களுக்குப் பிறகு வந்தவர்களை நீங்கள் முந்திவிடுவீர்கள். (மறுமையில்) நீங்கள் கொண்டு வரும் நன்மைகளைப் போன்று வேறு எவரும் கொண்டு வர முடியாது. ஆனால் உங்களைப் போன்று யார் செய்தார்களோ அவர்களைத் தவிர! ஒவ்வொரு தொழுகைக்குப் பிறகும் சுப்ஹானல்லாஹ் 10 தடவையும், அல்ஹம்து லில்லாஹ் 10 தடவையும், அல்லாஹு அக்பர் 10 தடவையும் கூறுங்கள்" என்று கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி),

நூல்: புகாரி (6329)

“இரண்டு காரியங்கள் உள்ளன. ஒரு முஸ்லிமான அடியான் அவற்றைப் பேணி வந்தால் சொர்க்கம் செல்வான். அவ்விரண்டும் இலகுவான காரியங்களாகும். ஆனால் அவற்றைச் செய்கின்றவர்களோ மிகக் குறைவு! ஒன்று: ஒவ்வொரு தொழுகைக்குப் பிறகு சுப்ஹானல் லாஹ் 10 தடவையும், அல்ஹம்து லில்லாஹ் 10 தடவையும் கூறு அல்லாஹு□ அக்பர் 10 தடவையும் கூறுவது. இது நாவுக்கு 150 நன்மையும் தராசுக்கு 1500 நன்மையுமாகும்...” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: இப்னு உமர்(ரலி), நூல்: அபூதாவூத்(5065), திர்மிதி(3410), நஸயீ(1331), இப்னுமாஜா(926)

ஒரு நாளைக்கு 150 நன்மைகள். எவ்வாறெனில் சுப்ஹா னல்லாஹ் 10, அல்ஹம்துலில்லாஹ் 10, அல்லாஹு□ அக்பர் 10. மொத்தம் 30, ஒரு நாளைக்கு 5 தொழுகைகள். 5 × 30 = 150 நன்மைகள்.

தராசுக்கு 1500 நன்மை எவ்வாறெனில் ஒரு நன்மைக்கு பத்து மடங்கு கூலி. 150 ×10 = 1500

**இ. சொர்க்கம் செல்லுதல்**

ஆயதுல் குர்ஸி ஓதுதல்:

“ஒவ்வொரு தொழுகைக்குப் பிறகும் யார் ஆயதுல் குர்ஸி ஓதினாரோ அவருக்கும் சொர்க்கத்திற்கும் இடையில் மரணத்தைத் தவிர வேறு எதுவும் தடையாக இருக்காது” என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

(ஸில்ஸிலதுஸ் ஸஹீஹா-972)

**ஈ. சொர்க்கத்தில் ஒரு மாளிகை எழுப்பப்படுதல்**

ராத்திப் சுன்னத்துகளை நிறைவேற்றுதல்

"ஒரு முஸ்லிமான அடியான் ஒரு நாளைக்கு 12 ரக்அத் உபரியாக அல்லாஹ்வுக்காகத் தொழுதால் அவனுக்காக அல்லாஹ் சொர்க்கத்தில் ஒரு மாளிகையைக் கட்டுகிறான். அல்லது அவனுக்காக சொர்க்கத்தில் ஒரு மாளிகை எழுப்பப்படும்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: உம்மு ஹபீபா (ரலி), நூல்: முஸ்லிம் (728)

## மூன்றாவது புதையலின் சுருக்கம்:

**1. சுப்ஹானல்லாஹ், அல்ஹம்துலில்லாஹ், அல்லாஹு□ அக்பர், லாஇலாஹ இல்லல்லாஹு□ வஹ்தஹு□ லாஷரீக்க லஹு□ லஹு□ல் முல்கு வலஹு□ல் ஹம்து வஹு□வ அலா குல்லி ஷையின் கதீர்**

**நற்கூலிகள்:** பாவங்கள் மன்னிக்கப்படுதல் + அருட் பாக்கியங்கள், பதவிகள் மற்றும் சிறப்புகளைப் பெறுதல் + சொர்க்கம் செல்லுதல் + 1500 நன்மைகள்.

**2. ஆயதுல் குர்ஸி ஓதுதல்**

**நற்கூலி:** சொர்க்கம் செல்லுதல்.

**3. ராத்திப் சுன்னத்துகளை நிறைவேற்றுதல்**

**நற்கூலி:** சொர்க்கத்தில் ஒரு மாளிகை எழுப்பப்படுதல்.